# எஃகிலும் காலங்களின் மாறுதலுக்கேற்ற முன்னேற்றம்

போர்வாளிலிருந்து தொடங்கி "விஜயந்தா" டாங்க் தயாரிப்பு வரை மனித சமுதாயம் வெகுவாக முன்னேறி யிருக்கிறது. அதற்கேற்றவாறு எஃகுத் துறையும் முன்னேறியிருக்கிறது. பண்டைக்காலத்து முறைப்படி மூலப் பொருளை உருக்கி இரும்பு தயார் செய்யப் பட்டது. ஆனால் இன்று நவீன விஞ்ஞான முறைப்படி விசேஷ தேவைகளுக்கேற்றவாறு விசேஷ மான எஃகுகள் உருவாகின்றன. விமானங்களுக்கு—க்ரோம் மோலிப்டினம் எஃகு. துப்பாக்கி குண்டுகள் புக முடியாத போர்க் கவசத்திற்கு—[illegible] எஃகு. பாலங்களுக்கு—ஹை டென்ஸைல் எஃகு. 64 ஆண்டுகளுக்கு முன் எங்களுடைய முதல் உலைக்களத்தில் வார்க்கப் பட்ட தீவிரம் மாறி உருமாறி, முன்னேற்றத்தின் புதிய வண்ணங் களுக்கு என்றென்றும் துணை நிற்கிறது.



டாடா ஸ்டீல்

TH. 3621 (R)

# ராஜஸ்ரீயின் உண்மையான விருப்பங்கள்

ராஜஸ்ரீயை ஒரு நிதியுதவி நிகழ்ச்சியில் கண்டபொழுது அவர் வாழ்க்கையில் உண்மையாக விரும்பும் சிலவற்றைப் பற்றித் தெரிவிக்குமாறு கோரினோம்.

'ஓ! என் விருப்பங்கள் ஏராளமானவை' என்று கூறிச் சிரித்தார். 'நான் மிகவும் விரும்பும் நகரம் சென்னை'.

'தீபாவளியின் வர்ண ஜாலங்களும் வெடிச் சப்தங்களும் எனக்கு மகிழ்ச்சியூட்டுபவை. ஜோஸியம் என்றாலோ, ஒரே மோகம். ஏனென்றால், அதுதானே நமது நண்பர்களை நன்கு அறிய உதவுகிறது.'

அவரது எழில் மற்றும் எடுப்பான தோற்றத்தின் ரகசியம் என்னவென்று கேட்டபொழுது அவர் கூறியதாவது: லக்ஸின் கவர்ச்சியூட்டும் தன்மைதான்'.

'லக்ஸ் மிருதுவானது, எனக்குத் துடிப்பூட்டுகிறது. எல்லோருமே லக்ஸ் உபயோகிக்க வேண்டுமென்று நான் விரும்புகிறேன்.'

K. Raja Sree




இந்துஸ்தான் லீவரின் ஒரு தரமான தயாரிப்பு.

# சாதாரண காப்பிகளுக்கு எதிரான புரட்சியில் சேருங்கள்!

வற்புறுத்தி
வாங்குங்கள்
ஒரு ஸ்பெஷல் காப்பி

விசேஷ செறிவு:
விசேஷ நிறம்:
விசேஷ பாக்கிங்:

விலை
ரூ. 2.87
வரிகள் தனி.




புதியது!
'அதி-ஸ்ட்ராங்கான'

## ரிக்கரி®

இன்ஸ்டன்ட்

இது விசேஷமானது!
நெஸ்கஃபே தயாரிப்பாளர்கள் அளிப்பது

ACIL-R-625 (3) TAM

டாடா டெக்ஸ்டைல்ஸ் வெளியீடு!

# பேட்டிஸ்ட்

**இலட்சோப லட்சம் ரசிக
பெருமக்களின் இதயங்களை
கொள்ளை கொள்ளும்
வரலாறு காணாத படைப்பு.
'டெரீன்'/ காட்டன் ஷர்ட்டிங்.**

குறுக்கிடும் சுருக்கங்களை வென்று வீழ்த்தி, இஸ்திரி பெட்டிகளை எட்டி உதைத்து எத்தனை பழசானாலும் என்றும் வெண்மை பளிச்சிட, ஏறுநடை போடும் எழுச்சிமிக்கத் தயாரிப்பு. இப்படியொன்று இதுவரை துணியானில் கடாவிட்டதில்லை என பார்த்தவர் பாராட்டுகிறார்கள்! கோட்டல ஷர்ட்டுகள் பேட்டிஸ்ட்டின் கைவண்ணமே

தயாரிப்பாளர்கள்:

**டாடா டெக்ஸ்டைல்ஸ்**



ULKA.TT 134 TH

கண்டு களியுங்கள் - **பேட்டிஸ்ட்** இப்போது உங்கள் அருகமைந்த கடைகளில் கிடைக்கின்றன

# உங்கள் சமையலை ருசித்த பின் கணவர் முகம் சுளிக்கிறாரா?



**ஹிந்தாலியம் பாத்திரங்களை உபயோகியுங்கள். சீக்கிரம் அவர், உங்களை விட சமையலில் சிறந்தவர் கிடையாது என்று புகழ ஆரம்பித்துவிடுவார்.**

அனுபவம் போதாத இல்லத்தரசிகளுக்கு ஹிந்தாலியம் பாத்திரங்கள் ஒரு வரப்பிரசாதம். ஏனெனில் அவை நீங்கள் திறம்பட சமைக்க உதவுகின்றன. தட்டையான, கனமான அடிப்பாகம் கொண்டவை ஆகையால், அவை உணவு தீய்ந்து போவதைத் தவிர்க்கின்றன. அவற்றில் சூடு சீராகப் பரவுகிறது எனவே உணவும் சீராக வேகிறது. அவற்றில் பால் அடிப்பிடிக்கும் தொல்லையும் இல்லை. ஹிந்தாலியம் பாத்திரங்களில் சமைக்கப்பட்டு பரிமாறப்படும் உணவு பளபளக்கும் தோற்றத்துடன் இருக்கிறது அதன் ருசி அதிகமாகிறது.

**ஹிந்தாலியம்®**

**சிறந்த இல்லாண்மைக்கு ஓர் பேருதவி.**



Sobhagya HAC-172 TAM

ஹிந்துஸ்தான் அலுமினியம் கார்ப்பொரேஷன் லிட் தபால் ஆபீஸ் ரேணுகூட், ஜில்லா, மிர்ஜாபூர்

# லக்ஷ்மி மில்ஸ்
# கோயம்புத்தூர் காட்டன் மில்ஸ்
# ஷோ ரூம்
## 40-மவுண்ட் ரோடு - சென்னை-6




லக்ஷ்மி மில்ஸ் கம்பெனி லிமிடெட்

கோயம்புத்தூர

VSK-LMC-454 TM

# கல்கி



## பொருளடக்கம்



பரிதாபி வைகாசி, 22 ○ ஜூன் 11, 1972



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 23-00 | ரூ. 11-50 |
| இதர நாடுகள் | ரூ. 50-00 | ரூ. 25-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 27-00 | ரூ. 13-50 |

# கவலையில்லாத மனிதன்

## மாத வருவாய் திட்டம்

நீங்கள் ஓய்வு பெற்றாலும் உங்களுக்கு மாதந்தோறும் வருமானம் கிடைக்க கனரா பாங்கிங் கார்பொரேஷன் லிமிடெட் இப்போது மாத வருவாய்த் திட்டத்தை உங்களுக்கென்றே உருவாக்கியிருக்கிறது.

உங்களுடைய பிள்ளைகள் படிப்பை முடித்து வேலைக்கு போய்க் கொண்டிருக்கலாம், அல்லது உங்கள் பெண்களை திருமணம் முடித்து புகுந்த வீடு அனுப்பியிருக்கலாம்; இருந்தாலும் உங்களுக்கென்று மாத வருமானம் கிடைத்தால் கவலையில்லாமல் இருக்கலாம் அல்லவா?

பத்து வருஷங்களுக்கு மாதந்தோறும் ரூ. 100/- கட்டிக்கொண்டு வந்தால் அடுத்த 10 வருஷங்களுக்கு மாதம் ரூ. 205/- வருவாய் கிடைக்கும்.

இந்தத் திட்டம் ஓய்வு பெறுபவர்களுக்கு மட்டுமல்ல, சிறுவர், சிறுமியர்களுக்கும் வருங்கால வாழ்க்கைக்கு ஏற்றதொரு திட்டம்.

*— சிநேக மனப்பான்மையுடன் விளங்கும் வங்கி*



## கனரா பாங்கிங் கார்பொரேஷன் லிமிடெட்

ESTD. 1906

(கார்பொரேஷன் பாங்க் லிமிடெட்)

பதிவு அலுவலகம்: உடுப்பி    நிர்வாக அலுவலகம்: மங்களூர்

maa/CBC/241-M Tam.

கல்கி

மலர் 31
இதழ் 46



தமிழ்த் திருநாடு தன்னைப்பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா

— பாரதியார்

# சுதந்திர வெள்ளிவிழா நினைவுகள்

**பா**ரதம், பாகிஸ்தான் ஆகிய இரு நாடுகளிலும் சுதந்திரம் பெற்ற வெள்ளி விழா ஆண்டு நடைபெற்று வருகிறது. பாகிஸ்தானில் யாஹ்யா கானின் திறமைக் குறைவாலும், காட்டுமிராண்டித் தனத்தாலும், அதன் கிழக்குப் பகுதியே தனியாகப் பிரிந்துபோன நிலையில் சுதந்திர வெள்ளிவிழா நடக்கிறது.

இந்தியாவில் இருபத்தைந்தாண்டுகளுக்கு முன்பு பிரிட்டிஷ் ஆட்சி முடிந்து நமக்குச் சுயாட்சி வந்தது உண்மை. ஆனால் அந்நியராட்சியின் இடத்தில் சுதேசிச் சர்வாதிகாரமே இன்று அமர்ந்திருக்கிறது! இன்று மக்களது வாழ்க்கையின் உயிர்த் துடிப்பைக் குலைத்து அவர்களைப் பேடிகளாக்கி இருக்கும் நிலையைக் காண்கிறோம். எதிர்காலத்தில் தனி மனித வாழ்வு என்னவாகும் என்ற நிச்சயமே இல்லாத தத்தளிப்பு நிலையைப் பார்க்கிறோம்.

பெரிதாக வெள்ளிவிழா நடத்த ஏற்பாடாகி வருகிறது. சுதந்திர பாரதத்தின் 'சாதனை'களைப் பிரமாதமாக விளம்பரப்படுத்துவார்கள். எத்தனை ஆடம்பர உற்சவம் எடுத்தால்தான் என்ன? மக்களின் உற்சாகம் மங்கி இருப்பதை அடியோடு மறைக்க முடியாது.

இன்று தேசத்தில் உற்சாகமாக இருப்பவர்கள் கம்யூனிஸ்ட்கள்தாம். ஏட்டுச் சுரைக்காயாகச் சோஷலிஸ கோஷம் செய்து வருகிற ஆட்சியாளர்கள், தம்மையறியாமலே நாட்டில் ஒழுங்கீனத்தையும், தத்தளிப்பையும் வளர்த்து வருகிறார்கள். இந்த வளர்ச்சியைக் கண்டு கம்யூனிஸ்ட்கள் குதூகலிக்கிறார்கள்! தாங்கள் விளைவிக்கும் விபரீதம் எத்தகையது என்று அறியாமலே சோஷலிஸவாதிகள் செய்து வருகிற சொத்துப் பறிமுதல் காரியங்களால் மக்களுக்கு எதிலுமே உறுதியும் ஊக்கமும் உற்சாகமும் இல்லாமற் போய்விட்டது. இந்த நிலை தேசிய வாழ்வையே கொடூரமாகப் பாதிக்கத் தொடங்கிவிட்டது. நம் நாட்டில் வியாபாரம், விவசாயம் இரண்டுமே பெருமளவில் கொடுக்கல்—வாங்கல் மூலம் தான் நடக்கின்றன. ஆனால் இப்போது தனியாரின் சொத்துக்களை அரசாங்கம் என்ன வேண்டுமாயினும் செய்துவிடக் கூடும் என்ற அச்சம் பரவியிருப்பதால், கொடுக்கல் வாங்கலில் ஈடுபட மக்கள் தயங்குகிறார்கள். தொழில், விவசாய முதலீடுகள் தலைசாய்த்துப் படுக்கத் தொடங்கி விட்டன.

தினந்தோறும் ஏதேனும் உரிமைப் பறிமுதல் பற்றிய செய்தி வந்த வண்ணம் இருக்கிறது. பத்திரிகைச் செய்திகளைப் பார்க்கும்போது சுதந்திர வெள்ளி விழா வருடத்தில் ஜனநாயகம் சிறுகச் சிறுகக் கருகிப்போய், சர்வாதிகாரப் போக்குகள் செழித்து வளருவதையே காண்கிறோம்.

எனினும் சில சந்தர்ப்பங்களிலேனும் பிரதமரவர்கள் நல்ல ஜனநாயக மரபுகளை மதித்துப் பேசுவதைக் காண்கையில் சிறிது நம்பிக்கை இழை விடுகிறது. உதாரணமாக, சமீபத்தில் பிரதமரவர்கள், தமது கட்சியின் பார்லிமென்ட் அங்கத்தினரிடையே உரையாற்றும் போது, தங்களுக்கே பெரும் வோட்டுப் பலம் இருக்கிறது என்பதால் அவர்கள் எதிர்க்கட்சி வாதங்களை அடியோடு அலட்சியம் செய்கிற போக்கைக் கண்டித்திருக்கிறார். தமது கட்சி அங்கத்தினர்கள் விஷயங்களை ஆராய்ந்து பார்த்து முடிவெடுப்பதில் அதிகம் பொழுதைச் செலவிட வேண்டுமெனக் கூறியிருக்கிறார். இதுபோன்ற சமயங்களில் பிரதமர் இருவிதமான மனநிலைகளுக்கிடையில் ஊசலாடுவதாகத் தோன்றுகிறது. ஒன்று சர்வாதிகார மனப்பான்மை. மற்றது, அவரது தந்தையைப் போல் அரசியல் சாஸனப்படி ஒழுகும் ஜனநாயகப் பாங்கு. ஒரேசமயத்தில் இரண்டு பீடங்களில் அமருகிற சர்க்கஸைச் செய்வது கடினம். பிரதமர் சரியான பீடத்தில் அமருவாராக! நம்பிக்கையுடன் பிரார்த்தித்துக் கொண்டே யிருப்போம். 'நம்பியவர் கெடுவதில்லை: நான்குமறைத் தீர்ப்பு!'

(அடிப்படை: ராஜாஜி 'ஸ்வராஜ்யா'வில் எழுதியது.)

# என்ன சேதி?

## அசாதாரணத் தியாகியின் மறைவு!

'காதலித்த பெண்ணைக் கைவிடுவதற்கில்லை; அதற்குப் பதிலாக பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்திப் பதவியையே கைவிடுவேன்' என்று முடிவெடுத்த தியாகியான வின்ட்ஸர் கோமகன் காலமாகிவிட்டார். இந்தத் தியாகத்தைப் போற்றும் ராஜாஜி, ''ஒருவரது கௌரவத்துக்கு இடுக்கண் வரும்போது பெருமதியாளர் வெகு சுலபமாகப் பெரும் தியாகம் செய்துவிடுவர். தசரதனின் கௌரவம் தராசுத் தட்டில் எடை போடப்பட்டபோது ஸ்ரீ ராமசந்திரன் வனவாசத்தை மகிழ்ச்சியுடன் ஏற்றான். இதே போல், தாம் மணக்க விரும்பிய மங்கையின் கௌரவத்தைக் காப்பதற்காகப் பிரிட்டிஷ் மன்னர் எட்டாம் எட்வர்ட் மகிழ்ச்சியுடன் சிம்மாதனத்தைத் துறந்து, பிரிட்டனை விட்டே வெளியேறி விட்டார்'' என்றார்.



வேறு பல இனங்களிலும் அவர் புரட்சி மனப்பான்மை படைத்திருந்தார். இளவரசராக இருந்த காலத்தில் தொழில் பிரச்னைகளில் இவர் தொழிலாளருக்குப் பகிரங்கமாகப் பரிந்துரைத்து, ஆட்சித் தலைவர்களின் ஆட்சேபணைக்குப் பாத்திரமானார். 1926-ல் பிரிட்டனில் நடைபெற்ற பொது வேலைநிறுத்தத்தின்போது இவரது தந்தையான ஐந்தாம்ஜார்ஜ் மன்னர் இவரை வெளியாரின் கண்ணில் படாமலே இருக்குமாறு பணித்தாராம்!

சூழ்நிலைக்கும் பிறப்புக்கும் வளர்ப்புக்கும் மாறான கருத்துக்களை மனச்சாட்சிப்படி ஏற்று உறுதியாகப் பின்பற்றுகிறவர்கள் அந்த அளவில் சிறப்புப் பொருத்தியவர்கள்தாம். அப்படிப்பட்ட அபூர்வப் பிறவிகளில் ஒருவரை வின்ட்ஸர் கோமகனின் மறைவில் இழந்து விட்டோம்.

## வாழும் கலைஞர்

சென்னை மிட்லண்ட் தியேட்டரில் பிருத்விராஜ்கபூர் நடித்த படமொன்றின் முதற் காட்சி. அவரும் பார்க்க வந்திருந்தார். படம் முடிந்தபின், ரசிகர் கூட்டம் அவரை மொய்த்துவிட்டது. காப்புக்குக் காவல்துறையினரை நிறுத்தலாமா என்று யோசித்தனர் நிர்வாகிகள்!

''கூடாது! எனக்கு — என் கலைத் திறனுக்குக் காவல் இந்த ரசிகர் கூட்டம்தான். இவர்கள் ஆசை தீரும் வரை என்னைப் பார்த்துச் செல்லட்டும். அதுவரை நான் இங்கேயே நிற்கிறேன்!'' என்று கூறி நின்று விட்டார். அடுத்த காட்சியை ரத்து செய்யும் அளவுக்குக் கூட்டம் அவரைச் சூழ்ந்து நெருக்கிவிட்டது!

இப்படித் தம் நடிப்புத் திறனால் மக்களை ஈர்த்த பிருத்விராஜின் பெருமையைப் பறைசாற்ற ஒன்றிரண்டல்ல; பல படங்கள் இருக்கின்றன. சிக்கந்தர், மொகலே ஆஸம் போன்ற படங்கள் அவரது கம்பீரமான உருவத்தாலும் பேச்சாலும் சிறப்புற்றன. 'தஹேஜ்' போன்ற வரதட்சிணைக் கொடுமையைச் சித்திரிக்கும் படத்திலோ....

தந்தையாக உயிரைக் கொடுத்து நடித்து நடிப்புக் கலைக்கே உயிர் ஊட்டினார். தம் மகளின் நலனுக்காக, அவர் வரதட்சிணை சேர்த்து, அவளது பல்லக்கைச் சுமந்து சென்ற பொழுது, அவரது கால்களே நடித்து, நடிப்புக் கலைக்கு இலக்கணம் வகுத்தன. பல்லக்குத் தூக்கியதில் தோள்பட்டைக் காயத்தைக் கண்டு, வரதட்சிணைக் கொடுமையை நினைத்து உருகாத உள்ளம் இல்லை எனலாம்!

எந்தப் பாத்திரம் ஏற்றாலும், அந்தப் பாத்திரமாகவே ஆகிவிடும் அற்புத ஆற்றலைப் பெற்றிருந்த பிருத்விராஜ், ஊமைப் படக் காலத்திலிருந்து, பேசும்பட நாட்கள் வரை, வரலாற்றையே சமைத்துக் காட்டினார்.

திரைக்கு ஆதாரம் நாடகமேடைதான் என்பதை உணர்ந்திருந்த அவர் 'பிருத்வி தியேட்டர்ஸ்' என்ற நாடகக் குழு ஒன்றைத் தொடங்கி 'தீவார்' போன்ற பல கருத்துச் செறிந்த நாடகங்களை இலக்கியத் திறன் மிளிர அளித்துள்ளார்.

பகட்டில்லாத நாட்டுப் பற்றும், பழுத்த தெய்வ பக்தியும் கொண்டவர் பிருத்விராஜ். அவரது மூன்று குமாரர்களும் தந்தைக்கேற்ற தனயர்களாகத் திரையுலகில் புகழ்பெற்றவர்கள். தந்தையையும் மகனையும் இணைத்துக் கூறும் குறளுக்கு இலக்கணமாகத் திகழ்பவர்கள்.



ராஜ்கபூர் தாம் எடுக்கும் படங்களில் எல்லாம் தந்தையையே குருவாகக் காட்டிப் படத்தைத் தொடங்கும் பழக்கத்தை மேற்கொண்டிருக்கிறார்.

உயிருடன் இருந்தபோது அவரைப் பத்மஸ்ரீ போன்ற பல பட்டங்கள் தேடி வந்தன. இறந்தபின், திரையுலகத் தந்தை பால்கே பரிசும் அவரை நாடி வந்துள்ளது.

உத்தமக் கலைஞர்கள் ஒருநாளும் மரிப்பதில்லை. நடிப்புக் கலை வரலாற்றில் பிருத்விராஜ் கபூரின் பெயர் சிரஞ்சீவியாக இருக்கும் என்பதில் ஐயமில்லை.

# ராஜாஜியின் கருத்துக்கள்

மதுபான வகைகள் நரம்புகளை ஊக்கி உற்சாகம் அளிப்பவை என்று பலர் எண்ணுவதைப் போலவே திரு கருணாநிதியும் கருதுகிறார் போலும்! ஒருவர் குடித்தவுடன் மதுபானங்களில் உள்ள ஆல்கஹால் அவரது ரத்தக் குழாய்களின் இறுக்கத்தைத் தளர்த்தி, கதகதப்பும் உற்சாகமும் தருவது உண்மை. ஆனால் சிறிது போதுக்குள்ளேயே இந்த நிலை மாறிவிடும். மதுவானது இயற்கையான சுறுசுறுப்பையும் குலைத்து அவரைத் தூக்க மயக்கத்தில் ஆழ்த்திவிடும்.

நீண்ட காலத்துக்குமுன் இவை குறித்து நான் ஒரு சிறு புத்தகம் எழுதினேன். அதில் மதுவின் தீமை பற்றிப் பலரது அதிகாரபூர்வமான கருத்துக்களை மேற்கோள் காட்டியிருக்கிறேன். இன்றைய பிரதமரின் தந்தையார் அதற்கு முகவுரை தந்திருக்கிறார். இப்புத்தகத்தைத் திரு கருணாநிதி படித்துப் பார்க்க வேணும்.

பிரான்ஸில் உணவுடன் தண்ணீர் அருந்துவதே கிடையாது; மதுவைத்தான் குடிப்பார்கள். தமிழ் நாட்டிலும் அவ்விதமே ஆகவேண்டும் என்று திரு கருணாநிதி பேராவல் கொண்டிருக்கிறார் போலும்! இந்திய தேசத்தில் இப்படிச் செய்வது பல விபரீத விளைவுகளை உண்டாக்கும். சர்க்காருக்கு வருமானம் கிடைக்கிறது என்பதால் இந்தத் தீய விளைவுகளை ஈடுகட்டியதாகாது. கலால் வரியாகச் சர்க்கார் வருமானம் உயரும்போதே, வேறு பல இனங்களில் வரவு குறைந்து போகும். மது வருமானம் என்பது ஓர் ஏமாற்று விஷயம். கள் வகைகளைக் குடித்தவுடன் தாற்காலிகமாக உற்சாகம் உண்டாக்கிவிட்டு, பிறகு ஏமாற்றம் தந்து மந்தப்படுத்துவது போலவே, மது வரி வருமானமும் முதலில் கணிசமாகத் தோன்றி, பிறகு குறைந்தே போகும்.

★

எனக்குப் பல விஷயங்கள் புரிவதில்லை. அவற்றில் ஒன்று, நில உச்சவரம்புக் கோஷம். சர்க்காரின் தலையீடு இல்லாமலே, தலைமுறைக்குத் தலைமுறை நிலச்சொத்து பங்கீடாகும்போது நிலத்தின் சராசரி அளவு குறைந்து போவதை வெற்று கோஷக்காரர்கள் ஏன் கவனிப்பதில்லை என்று எனக்குப் புரியவில்லை. பதினெட்டு ஏக்கர் நிலச்சொத்து படைத்த ஒருவர் காலமாகும்போது, அவருக்கு ஆறு குழந்தைகள் இருந்தால், அவர்கள் தலா மூன்று ஏக்கர் நிலமே பெறுவர். அவர்களுக்கு அடுத்த தலைமுறையில் தலைக்கு அரை ஏக்கரே கிடைக்கலாம். ''உச்சவரம்புவாலா''க்கள் வறுமையைப் போக்குவதற்குப் பதில், வறுமையைச் சிருஷ்டிக்கவே செய்கிறார்கள். இவர்கள், இயற்கையான நிலப் பங்கீட்டைப் புரிந்து கொள்ளப் பிடிவாதமாக மறுப்பது ஏன்? என்னுடைய புரிந்து கொள்ளும் சக்தி குறைவாக இருப்பதாலோ என்னவோ, எனக்கு இதுவே பிரச்னையாக இருக்கிறது.

★

எனக்குப் புரியாத இன்னொரு விஷயம்: சங்கடங்களை உண்டாக்கித் தொழிலகங்களைப் பாதிக்கிற தொழிற்சங்கத் தலைவர்கள், இதன் இறுதி விளைவாகத் தொழிலாளரே அதிகம் பாதிக்கப்படுவர் என்று ஏன் உணரவில்லை? உபத்திரவம் தாங்காமல் தொழிலகத்தை மூடும்படி நேரிட்டால் முதலாளிகள் ஓரளவு வருந்தவே செய்வர். இருப்பினும் தொல்லை தீர்ந்தது என்று நிம்மதியுடன் அவர்கள் அதன் பின்னும் வாழ்க்கை நடத்த முடியும். தொழிலாளர்கள்தாம் அலுவலகம் மூடப்பட்டால், வாழ்க்கை நடத்த முடியாமல் அவதிப்படுவார்கள். ஏற்கனவே இருக்கும் ஏழைப் பட்டாளத்தில், அவர்களும் சேர்ந்து, தேசத்தில் வறுமை பரவும். இவர்களுக்குத் தொழிற்சங்கத் தலைவர்கள் எவ்வித உதவியும் தர இயலாது. அசோக் லேலந்து ஆலை தொடர்ந்து நடக்கச் செய்த திரு குசேலர் மேற்படி உண்மையை உணர்ந்ததாகத் தோன்றுகிறது. மகிழ்ச்சி அடைகிறேன்.

## பக்தவத்சலன் பவனி காணட்டும்!

'நின்றவூர் நித்திலம்' என்று திருமங்கை ஆழ்வாரால் கொஞ்சிப் போற்றப்பட்டவர் திருநின்றவூர் பக்தவத்ஸலப் பெருமான். ''இன்னனூர்'' என்று மக்கள் மொழியில் மருவி வழங்கும் திருநின்றவூர், பத்மபுராணத்தில் குறிப்பிடப்பெறும் திவ்விய தேசமாகும். குழந்தைகளிடம் காட்டும் அன்பை அடியார்பால் பொழிந்து கொண்டு பக்தவத்ஸலன் என்ற இனிய திருநாமத்தில் பெருமாள் இங்கு எழுந்தருளியிருக்கிறார். பெருமானின் தேரை ஐம்பதாயிரம் ரூபாய்ச் செலவில் புதுப்பிக்கத் திருப்பணி மேற்கொண்டிருக்கிறார்கள். கேசவனை ரதத்தில் எழுந்தருளச் செய்து தரிசித்தால் மறு பிறவியே கழன்றுவிடும் என்பது ஆன்றோர் வாக்கு. அடியார்கள் கீழ்க்கண்ட முகவரிக்குப் பொருளுதவி அனுப்பிவைக்க வேணும்: ''பொருளாளர், தேர்த் திருப்பணிக் குழு, ஸ்ரீ பக்தவத்சல சுவாமி தேவஸ்தானம், திருநின்றவூர், செங்கற்பட்டு மாவட்டம்.

# உயர்ந்த இசைக்கொரு வசந்த தேசாய்

அற்புத சாதனை செய்யும் இந்தக் கலைஞருக்கு அறுபதாண்டு நிறைகிறது!

தரக் குறைவுக்கு இடையே உயர்ந்த தரத்தைக் காப்பதென்பது அரும் சாதனைகளில் ஒன்று. அரசியல், இலக்கியம், கலை முதலிய எதிலுமே மட்டரகமான போக்குக்கள் மக்களை அசுர பலத்துடன் கவர்ந்திழுக்கும் போது, இத்துறைகளில் ஈடுபட்டவர்கள் இந்த வெள்ளத்தில் ஓரளவேனும் அடித்துச் செல்லப்படுவது இயற்கையே. ஆனால் எத்தனை வெள்ளத்துக்கும் அசைந்து கொடுக்காமல் பாறாங்கல்லாக நிற்கிற ஓர் அற்புத சாதகரை இவ்விதழ் அட்டையில் காண்கிறீர்கள். ஆம், நாளுக்கு நாள் மட்டமாகிக் கொண்டு வரும் சினிமா இசைத் துறையில், சாஸ்திரீய சங்கீத அம்சங்களைத் தழுவி, கௌரவமான மெல்லிசை படைத்து வரும் ஸ்ரீ வஸந்த் தேசாய் அவர்கள் ஓர் அற்புத சாதகர்தாம்.

தமது பதினொலாவது வயதிலிருந்து, நாற்பத்து நான்கு ஆண்டுகளாக சினிமா—நாடகத் துறைகளில் தொடர்பு கொண்டிருப்பவர் ஸ்ரீ வஸந்த் தேசாய்.' என்றென்றும் நிலைத்து நிற்கும் புகழ் கொண்ட பல திரைப்படங்களுக்கு இசை அமைத்துத் தந்திருப்பவர் அவர். டாக்டர் கோட்னிஸ், சகுந்தலா, ராமராஜ்யா, ஜனக் ஜனக் பாயல் பாஜே, கூஞ்ஜ் உடீ ஷெஹ்னாயீ, குட்டீ முதலிய படங்களைக் குறிப்பிட்டாலே போதும். மொத்தம் நானூறு திரைப்படங்களுக்கு இசை அமைப்பாளராக அரும்பணி ஆற்றியிருப்பவர் அவர். இது தவிர மராத்தி நாடகங்களுக்கும் இசை அமைத்துத் தந்திருக்கிறார். அவரது இசை அமைப்பு சாஸ்திரீயமானது. அதே போதில் மக்களை ஈர்க்கும் லளிதமும், நளினமும் கொண்டது. அவரது நுட்பமான கற்பனை வளம் 'படேபடே உஸ்தாது'களின் பாராட்டையும் பெற்றதாகும்.

இசைச் சிறப்பு மட்டுமின்றி, குணச் சிறப்பும் கொண்டவர் ஸ்ரீ வஸந்த் தேசாய். அவரை அறிந்த அனைவரும் அவர் தூய்மையானவர், அடக்கமானவர், தெய்வ பக்தியும் தேசபக்தியும் மிகுந்தவர் என்று ஏகமனதாகப் பாராட்டுவர்.

சிறுவர்களைக் கீழ்த்தரமான பாட்டுக்களும், மட்டமான மெட்டுக்களும் இழுத்துக் கொண்டு போவதைத் தடுக்கும் பொருட்டு, நன்னெறிச் செய்யுட்களுக்கு சாஸ்திரீய சங்கீத வழுவின்றியே கவர்ச்சிகரமாக மெட்டமைத்துப் பிரசாரம் செய்கிற நற்பணியை மகாராஷ்டிர அரசினர் ஸ்ரீ வஸந்த் தேசாயிடம் ஒப்புவித்திருக்கின்றனர். அவரும் இந்தப் பணியை அமோகமாக நிறைவேற்றி வருகிறார் ஊர் ஊராகச் சென்று சிறுவரின் செவியையும் சிந்தனையையும் நிரப்பும் பாடல்களைப் பரப்பி வருகிறார். குழந்தைகளும் அவற்றைக் கும்மாளமிட்டுத் திருப்பிப் பாடுகின்றனர். இதில் குறிப்பிடத்தக்க அம்சம், இதற்காக அரசினர் வஸந்த் தேசாய்க்கு அளிக்க முன் வந்த சம்மானத்தை ஏற்க அவர் மறுத்து விட்டிருக்கிறார். இளம் தலைமுறையினருக்கு இசையைக் காத்துத் தருகிற நற்பணியே அந்தப் பணிக்குச் சம்பாவனையும் ஆகும் என்கிறார்!

சீனப் படையெடுப்பின்போது ஸ்ரீ வஸந்த் தேசாய் பல தேசிய கீதங்களைப் பிரசாரம் செய்து மக்களின் உணர்ச்சியைத் தட்டி எழுப்பியதும் அவரது நாட்டுப் பற்றுக்குச் சான்றாகும்.

ஸ்ரீ வஸந்த் தேசாயின் கலைச் சேவையையும் தேச சேவையையும் மதித்து 'பத்மஸ்ரீ' விருது சூட்டியுள்ளது பாரத சர்க்கார்.

கல்கி வாசகரைப் பொறுத்தமட்டில் அவரது சேவைகளில் உயர்ந்து நிற்கும் ஒன்று உண்டு: ஸ்ரீமதி எம். எஸ். அவர்கள் ஐ.நா. சபையில் இசைப்பதற்காக ஸ்ரீ காஞ்சி ஜகத்குரு அவர்கள் ''மைத்ரீம் பஜதாம்'' என்ற மங்களாசாஸன சுலோகத்தை இயற்றித் தந்தார்கள் அல்லவா? இதற்கு நெஞ்சை அள்ளும் விதத்தில் மெட்டமைத்துத் தந்தவர் ஸ்ரீ வஸந்த் தேசாய் அவர்களே. தமக்கு இந்தப் பொறுப்புக் கிடைத்ததைப் பெரும் பாக்கியமாகக் கருதினார் அவர்.

இந்தப் பெரும் கலைஞருக்கு, நல்ல மனிதருக்கு ஜூன் 9—ந் தேதி அறுபதாண்டு நிறைந்து மணிவிழா கொண்டாடப்படுகிறது. அவரது பெயரில் ஒரு சங்கீத அகாடெமி நிறுவுவது உள்படப் பல திட்டங்கள் போடப்பட்டிருக்கின்றன. ஸ்ரீ வஸந்த் தேசாய்க்கு நம் உளமார்ந்த வாழ்த்துக்களை அளிக்கிறோம். ஆயிரம் பல்லாயிரம் ஆண்டுகளாக அணையா விளக்காக வந்துள்ள இசை மரபை, இன்றைய புயல் காற்றிடையும் காத்து வரும் தீரர்களில் ஒருவரான ஸ்ரீ வஸந்த் தேசாய் இந்த அவசியமான பணியை இன்னும் பலப் பல ஆண்டுகள் சிறப்புடன் ஆற்றும் ஆற்றலை அருளக் கலைவாணியை வேண்டுகிறோம்.




# 'சோம சுந்தரம் ஸ்டேடியம்!

பள்ளிக்கூடத்துக்கு அந்த மாணவன் கால தாமதமாக வந்தான். அவனிடம் ஆசிரியர் கேட்டார்: ''ஏன் இப்படித் தாமதமாக வந்தாய்?''

''ஸார்! வாசலிலுள்ள போர்டுதான் காரணம்: 'பள்ளிக்கூடம் — மெதுவாகப் போ' என்று போட்டிருக்கு!'' என்று பையன் இடக்காகப் பதிலளித்தானும்!

தியாகராயநகர் சோமசுந்தரம் மைதானத்தில் 25,000 ரூபாய் செலவில் ஒரு ஸ்டேடியம் கட்டி, அதைத் திறப்பதற்குத் திரு 'சோ'வை அழைத்திருந்தார்கள்.

மணி இந்தரையிலிருந்து கார்ப்பொரேஷன் பாண்ட் குழுவினர் தங்களுக்குத் தெரிந்த அத்தனை டியூன்களையும் வாசித்துத் தள்ளி விட்டார்கள். ஆறரை மணிக்குக் கூட்டம் ஆரம்பம் என்று பத்திரிகையில் போட்டிருந்தது. நகரசபை அதிகாரிகள் அங்குமிங்கும் அலைய வந்து கொண்டிருந்தார்கள். விழாவில் கலந்து கொள்ளும் எல்லோரும் — மேயர் உள்பட எல்லோருமே — வந்துவிட்டனர்.

''திறப்பாளர் சோ இன்னும் வரக் காணுமே!''

''இனிமே கல்யாணங்களுக்கு முகூர்த்த நேரம் 8லிருந்து 9–30 வரை என்று குறிப்பிடுவது போல் 'கூட்டமும் 6 லிருந்து 7–30க்குள் ஆரம்பமாகும்!' என்று போட்டுவிடலாம்!'' என்றார் ரொம்ப நேரமாகக் காத்திருந்த பிரமுகர்.

சரியாக ஏழு மணிக்குத் திரு சோ வந்து சேர்ந்தார்.

காமாட்சி ஜெயராமன் தலைமை வகிக்கத் 'துக்ளக்' ஆசிரியர் சோ நறுக்குத் தெறித்தாற்போல் பேசினார்.

''நான் சம்பந்தமில்லாத விஷயங்களில் புகுந்து விளையாடுகிறேனே, அதற்காகத்தான் என்னைக் கூப்பிட்டார்களோ?'' என்றார் சோ. ''விளையாட்டு மைதானத்திலே அரசியலை விளையாட வைத்துவிடாதீர்கள். வருங்கால இளைஞர்கள் உடலுக்கும் உள்ளத்துக்கும் உற்சாகமூட்டும் விளையாட்டுக்களில் ஈடுபட இந்த ஸ்டேடியம் பயன்படட்டும்!'' என்று கூறி ஸ்டேடியத்தைத் திறந்து வைத்தார்.

ஒருவர் கட்டடத்துக்கு அஸ்திவாரக் கல் போட்டுவிட்டு அந்த இடத்தையே சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தார்.

''என்ன! இந்த இடத்தையே இப்படிச் சுற்றிச் சுற்றி வருகிறீர்கள்? இன்னும் கட்டடம் எழும்பவில்லையே?''

''கட்டடம் எழும்பாவிட்டால் போகிறது! என் பெயருள்ள அஸ்திவாரக் கல்லை யாரும் தூக்கிக்கொண்டு போய்விடக் கூடாதே என்று அடிக்கடி பார்க்க வருகிறேன்!'' என்றாராம்.

நன்றாகக் கட்டி முடித்த ஸ்டேடியத்தையே திறந்து வைக்கும் வாய்ப்பு திரு 'சோ'வுக்குக் கிடைத்தது அவரது அதிர்ஷ்டம் தான்.

— பி. எஸ். எம்.

## சத்தத்தை ஒழிக்க...



இத்தாலியில் பிஸாரோ என்ற இடத்தில் தெருவில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த மோட்டார் சைக்கிள்கள் திடீர் திடீர் என்று காணாமல் போயின. திருடன் யார் என்று திகைத்துக் கொண்டிருந்த போலீஸார் இறுதியில் அகஸ்டினோ என்ற 19 வயது வாலிபன் ஒருவனைக் கைது செய்தனர். ஆயினும் அந்த வாலிபன் பணத்துக்காக அவற்றைத் திருடவில்லை என்று கூறினான். ''மோட்டார் சைக்கிள்கள் எழுப்பும் நாராசமான சத்தத்தைச் சகிக்க முடியவில்லை. அதிகாரிகளும் இதனைக் குறைக்க எதுவும் செய்யவில்லை. எனவேதான் அவற்றைத் திருடிக் கடலுக்குள் எறிந்து விட்டேன்'' என்று கூறினான் அந்த வாலிபன். அவன் சொன்னது ஒன்றும் பொய்யல்ல. அவன் சொன்ன இடத்திலிருந்து இதுவரை பதினொரு மோட்டார் சைக்கிள்களை மீட்டுள்ளனர்.

—ஆதாரம்: நியூடைம்ஸ்.

பவுடரினால் துலக்கிய
இடத்திலே கீறல்
விழுந்ததுதான் மிச்சமா?

மாசில்லாத பளபளப்பை வீசிட
வைப்பது விம்.




கசடு இல்லை!
பிசுக்கு இல்லை!
கீறல் இல்லை!

# வரதட்சிணைப் பிரச்னை



## ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

ஒவ்வொருவருக்கும் எத்தனையோ விதமான கஷ்டங்கள், தொல்லைகள் இருக்கின்றன. அதையெல்லாம் சிறிது காலமாவது மறந்திருப்பதற்கே இங்கே பூஜை பார்க்கவும், உபந்நியாசம் கேட்கவும் வருகிறீர்கள். ஆனால் இந்த உபந்நியாசம் வெறும் பொழுதுபோக்காக மட்டும் இருந்தால் பிரயோசனமில்லை. உபந்நியாசம் உபயோகமாக இருக்க வேண்டுமானால் அதில் உங்கள் வாழ்க்கையில் அநுசரிப்பதற்கு ஏதாவது ஓர் அம்சமாவது இருக்க வேண்டும். உங்களுக்குப் பிடிக்காத விஷயமாக இருந்தாலும்கூட, உங்களுடைய க்ஷேமத்தை உத்தேசித்து நான் சில விஷயங்கள் சொல்லத்தான் வேண்டும்.

சென்னை நகரத்தில் வந்து நீண்ட காலமாகத் தங்கியதில் என் மனசில் மிகுந்த கிலேசம் உண்டாக்கியுள்ள ஓர் அம்சத்தைச் சொல்வதற்காகத்தான் இத்தனை பீடிகை போடுகிறேன். இங்கே என்னிடம் வயது வந்த எத்தனையோ பெண்கள் தங்களுக்குக் கல்யாணமாகவில்லை என்ற குறையுடன் கண்ணும் கண்ணீருமாக வந்து முறையிடுகிறார்கள். அவர்கள் மனத்தில் எத்தனை கஷ்டமும் தாபமும் இருக்கின்றன என்று எனக்குத் தெரிகிறது. இந்தப் பரிதாபமான காட்சி என்னை மிகவும் வேதனைப்படுத்துகிறது.

இந்தக் குழந்தைகள் வயது முற்றிய பின்னும் கல்யாணமாகாமல் நிற்பதற்குக் காரணம் என்ன? சாரதாச் சட்டத்தின் தலையில் பழியைப் போடுவதை நான் ஒப்புக்கொள்வதற்கில்லை. சாரதாச் சட்டம் பதினாறு வயசுக்குக் கீழ் கல்யாணம் செய்யக் கூடாது என்றுதான் கட்டுப்படுத்துகிறது. இருபத்தைந்து முப்பது வயசு வரை பெண்களைக் கல்யாணம் செய்து கொடுக்காமலிருப்பதற்கு அந்தச் சட்டம் காரணமாகாது. கல்யாண வயசுக்குத்தான் கட்டுப்பாடு இருக்கிறது. உபநயனம் முதலிய மற்ற சம்ஸ்காரங்களைச் சட்டம் எவ்விதத்திலும் கட்டுப்படுத்தாமலிருந்தும்கூட அவற்றையும் உரிய காலத்தில் செய்யாமல்தானே இருக்கிறோம்? எனவே பெண்கள் கல்யாணமாகாமல் கஷ்டப்படுவதற்குச் சட்டத்தை இழுக்க வேண்டியதில்லை.

கல்யாணம் என்றால் ஆடம்பரமாகச் செலவழிக்க வேண்டும் என்றாகி விட்டது. இதைவிட முக்கியமாகப் பிள்ளை வீட்டார் வரதட்சிணையும் சீர் வரிசையும் ஏராளமாகக் கேட்கிறார்கள். அன்றாட வாழ்க்கைக்கே கஷ்டமாயிருக்கிற நிலையில் இத்தனை செலவுக்கு ஈடு கொடுத்துச் சேமித்து வைக்கப் பெண்ணைப் பெற்றோருக்கு முடியாமல் போகிறது. பணக் கஷ்டம் காரணமாகவே குழந்தைகள் கல்யாணமாகாமல், மாளாத மனக்குறையுடன் நிற்கிறார்கள்.

இதோடு விஷயம் நிற்கவில்லை. இதைத் தொடர்ந்து, பாரத தேசத்தின் ஸ்திரீ தர்மத்துக்கே விரோதமான போக்குகள் உண்டாகின்றன. கல்யாணமாகாத பெண்ணைப் படிக்க வைத்து, வேலைக்கு விட்டு, அவளே சம்பாதிக்கும்படியாகப் பெற்றோர்கள் விடுகிறார்கள். முதலில் இது அவமானமாக இருந்தது. ஆனால் முதலில் தயக்கத்தோடு ஆரம்பிக்கிற ஓர் ஏற்பாடு வழக்கத்தில் வந்துவிட்டால் பிறகு அதில் கூச்சம் போய்விடுகிறது. முதலில் அவமானமாக நினைத்த விஷயமே பிறகு பழகிப்போய் விடுகிறது. அதுவே நாகரிகத்தின் அடையாளம் என்ற அளவுக்கு வந்து விடுகிறது. பெண்கள் உத்தியோகம் பார்ப்பது, இப்படித்தான் ஆகிவிட்டிருக்கிறது. வயது வந்த பெண்கள் சர்வ சகஜமாக ஆண்களுடன் சேர்ந்து உத்தியோகம் பார்ப்பது நம் தேச ஆசாரத்துக்கே விரோதமானது. இதனால் எத்தனையோ தப்பிதங்கள் நேருகின்றன. இதை எல்லோரும் கண்டும் காணாமல் இருப்பது போல் நானும் இருந்தால் பிரயோஜனமில்லை. என் மனத்தில் பட்டதை, நீங்கள் கேட்டாலும் கேட்காவிட்டாலும், வெளியிட்டுச் சொல்வது கடமை என்பதால் சொல்லுகிறேன்.

பிள்ளைகளைப் பெற்றவர்கள் ஒருகாலும் வரதட்சிணை வாங்குவதில்லை என்று தீர்மானம் செய்ய வேண்டும். மற்ற விஷயங்கள் திருப்தியாக இருந்தால் கல்யாணத்தை முடிக்க முன்வரவேண்டும். வரதட்சிணை கேட்டால்தான் தங்களுக்கு மதிப்பு, வரதட்சிணை கேட்காவிட்டால் தங்கள் பிள்ளைக்கு ஏதோ குறை என்று நினைப்பார்கள் என்பது போன்ற எண்ணங்களை விட்டு, எல்லோருக்கும் சந்தோஷம் தரும் வகையில் கல்யாணத்தை முடிக்க வேண்டும். தேசத்துக்காக, பாஷைக்காக, அரசியல் கொள்கைக்காக ஏதேதோ தியாகங்கள் செய்கிறார்கள். நம் தர்மத்துக்காக இந்த வரதட்சிணையைத் தியாகம் செய்யக் கூடாதா?

வரதட்சிணைப் பழக்கமும் கல்யாணங்களை டாம்பீகமாக நடத்துகிற வழக்கமும் தொலைய வேண்டும். பெயருக்கும் புகழுக்கும் ஆசைப்பட்டுத் தான தர்மங்கள் செய்வதை விட, பணக்காரர்கள் தங்கள் ஏழைப் பந்துக்களின் விவாகத்துக்குத் தாராளமான திரவிய உதவி தரவேண்டும். காலாகாலத்தில் நம் பெண் குழந்தைகளுக்குக் கல்யாணமாகி ஸ்திரீ தர்மமும், சமூக தர்மமும் கெடாமலிருக்க வேண்டும் என்பது என் ஆசை.




## 6. பாதிக் கல்யாணம்

"வெள்ளைக்காரன் ரொம்பக் கெட்டிக்காரன் என்றல்லவா இத்தனை நாட்கள் எண்ணிக் கொண்டிருந்தேன்? அவனிடத்திலும் அசட்டுத்தனம் இருக்கிறது! இல்லாவிட்டால் எங்கே பார்த்தாலும் பாழும் கோட்டையும், மயானமும், மசூதியுமாயிருக்கும் இந்த ஊருக்குத் தலைநகரத்தைக் கொண்டு வருவானா? சிவனே என்று கல்கத்தாவிலேயே இருக்கக் கூடாதோ?" — இவ்விதம் டில்லியைச் சுற்றிப் பார்த்துவிட்டு வந்து வீட்டுக்குள் பிரவேசிக்கும்போது காமாட்சி அம்மாள் தன்னுடைய அபிப்பிராயத்தைத் தெரிவித்தாள்.

"என்ன, அம்மா, இப்படிச் சொல்கிறீர்களே? செங்கோட்டையிலே பார்த்தோமே ஷாஜஹானின் அரண்மனை? அது ஒன்று போதாதா?" என்ன அழகு! என்ன அழகு! இந்த டில்லி அரண்மனையே இவ்வளவு அழகாயிருக்கிறதே! இன்னும் ஆக்ரா அரண்மனையும் தாஜ்மகாலும் எப்படியிருக்குமோ?" என்றாள் சீதா.

"எனக்கு மோத்தாகார் வாந்தாம்! தோங்கா வந்திதான் வேணும். சூரியா மாமா! என்னை நேத்திக்குத் தோங்காவிலே ஏத்திந்து போறயா?" என்றாள் வஸந்தி. ஹிந்தி பாஷையில் உள்ளது போல், வஸந்தியின் மழலை மொழியிலும் நேற்றும் நாளையும் ஒன்றாக இருந்தன.

"ஆகட்டும் வசந்தி! உன்னை டோங்கா வண்டியில் நேற்றைக்கும் ஏற்றிக் கொண்டு போகிறேன்; நாளைக்கும் ஏற்றிக் கொண்டு போகிறேன்!" என்றான் சூரியா.

எல்லாரும் வீட்டுக்குள் பிரவேசித்து ஹாலில் போட்டிருந்த சோபாக்களில் உட்கார்ந்தார்கள்.

"இங்கிலீஷ்காரன்தான் ஏதோ தெரியாத்தனமாய் டில்லிக்கு வந்துவிட்டான். இங்கிலீஷ்காரனை விரட்டிவிட்டுச் சுயராஜ்யம் ஆள வேண்டும் என்று சொல்லும் சூரியாகூட இந்த ஊருக்கே வந்து சேர்ந்திருக்கிறானே, அம்மா! இந்த வேடிக்கைக்கு என்ன சொல்லுகிறது?" என்றான் ராகவன்.

"இங்கிலீஷ்காரனை விரட்டுகிறதற்கு வேறு எங்கே போகிறது? அவன் இருக்கிற இடத்துக்குத்தானே வரவேண்டும்?" என்று சூரியா கேட்டான்.

"அப்படியென்றால் நீ அதற்காகத்தான் டில்லிக்கு வந்திருக்கிறாய் என்று சொல்லு; இங்கிலீஷ்காரனை விரட்டியடிக்கப் போவது நிச்சயந்தானுக்கும்!" என்றான் ராகவன்.

"நாம்தான் இன்றைக்குப் பார்த்துவிட்டு வந்தோமே; கோரி முகம்மது காலத்திலிருந்து எத்தனை ராஜ்யங்கள் இந்த டில்லியில் இருந்திருக்கின்றன அவையெல்லாம் போனதுபோல் இங்கிலீஷ் ராஜ்யமும் போக வேண்டியதுதானே? இங்கிலீஷ்காரன் மட்டும் இங்கே சாசுவதமா யிருக்கப் போகிறானோ?" என்றான் சூரியா.

"யார் கண்டது? இந்தப் பாழடைந்த பட்டணத்திலேதான் இருக்க வேண்டும் என்பது இங்கிலீஷ்காரனுடைய தலை

விதியா யிருந்தால்?'' என்றாள் காமாட்சி அம்மாள்.

''ஏன், அம்மா! இப்படி டில்லியைப்பற்றிக் குறை சொல்கிறீர்களே? பிரிதிவிராஜனுடைய கோயிலும் அரண்மனையும் இருந்த இடம் எவ்வளவு நன்றாயிருந்தது? எனக்கு அந்த இடத்தை விட்டு வருகிறதற்கு மனமேயில்லை!''

''சிவ சிவா! கோயிலை இடித்து மசூதி கட்டியிருக்கிறது! அதைப் பார்க்கிறதற்கு என்னை வேறே அழைத்துக் கொண்டு போய் விட்டீர்கள்! இந்த ஊரைப் பார்த்த பாவம் காசிக்குப்போய்க் கங்கையிலே ஸ்நானம் பண்ணினால்தான் தீரும்!'' என்றாள் காமாட்சி அம்மாள்.

''இந்த ஊரில் யமுனை இருக்கிறதே மாமி! யமுனையும் புண்ணியநதிதானே? யமுனையில் ஸ்நானம் செய்தால் பாவம் போய் விடாதா?'' என்றாள் சூரியா.

''அதென்னமோ, — இந்த ஊரில் உள்ள யமுனை, யமுனையாகவே எனக்குத் தோன்றவில்லை. பாகவதத்திலே சொல்லியிருக்கிற யமுனை நதி இதுதான் என்று சொல்கிறாய்?''

''சாக்ஷாத் அந்த யமுனையேதான் இது! பின்னே எப்படியிருக்கும் என்று எதிர்பார்த்தீர்கள்? யமுனைக் கரையில் கடம்ப மரத்தின் கீழே நின்று கிருஷ்ண பகவான் புல்லாங்குழல் வாசித்துக் கொண்டிருப்பார் என்று நினைத்தீர்களோ? அது துவாபர யுகம், இது கலியுகம்'' என்றான் ராகவன்.

''கலியுகம் என்றுதான் நன்றாய்த் தெரிகிறதே! அடாடா! உன் தகப்பனார் பாகவதம் தசமஸ்கந்தத்திலிருந்து படித்துக் காட்டி அர்த்தம் சொல்வார். யமுனையும் கிருஷ்ண பகவானும் கோபிகா ஸ்திரீகளும் நம் கண் முன்னால் நிற்பதுபோல் இருக்கும். கிருஷ்ணனும் கோபிகைகளும் வேண்டாம். கிருஷ்ணன் மேய்த்த பசுமாட்டைக்கூட காணோமே? மந்தை மந்தையாய் எருமை மாடு யமுனையில் விழுந்து கிடக்கிறதே?''

''கிருஷ்ணன் பசு மாடு மட்டுந்தான் மேய்த்தாரோ, எருமை மாடும் சேர்த்து மேய்த்தாரோ? நமக்கு எப்படி நிச்சயமாய்த் தெரியும்?'' என்று ராகவன் சொன்னான்.

''கிருஷ்ணன் ஒருநாளும் எருமை மாடு மேய்த்திருக்க மாட்டார். பசு மாடுதான் மேய்த்திருப்பார்! பாகவதத்தில் சொல்லியிருப்பதெல்லாம் பொய்யாயிருக்குமா!''

''ஒரு வேளை பாகவதத்தில் வரும் கிருஷ்ண பகவான் பசு மாடு மேய்த்திருக்கலாம். ஆனால் இப்போதெல்லாம் சினிமாக்களில் வரும் கிருஷ்ண பரமாத்மாக்கள் எருமை மேய்க்கத்தான் லாயக்கானவர்கள்!''

''சினிமாவும் இனிமாவும் நான் என்னத்தைக் கண்டேன்?.... அது எப்படி



யாவது இருக்கட்டும். என்னைக் காசிக்கு எப்போது அழைத்துக் கொண்டு போகிறாய், ராகவா !''

'' காசிக்குப் போனால் இதைவிட அதிகமாய்க் குறை சொல்லுவீர்கள் ! கங்கை நதிகூடப் பார்க்கிறதற்கு ஒரு மாதிரியாகவே இருக்கும் ! நம்ம க்காவேரி தீரத்தைப் போல் இரண்டு பக்கமும் ஒரே சோலையாயிருக்கும் என்று நினைத்துக் கொள்ளாதீர்கள்!''

''ஏன், ஸார்! காசிக்குப் போவது இருக்கட்டும்! ஆக்ராவுக்கு எப்போது போகிறது?'' என்று சீதா கேட்டாள்.

'' ஆக்ராவைப் பார்க்காவிட்டால் நீ தூங்க மாட்டாய் போலிருக்கிறது. வருகிற பௌர்ணமியன்று போகலாம். சூரியா ! நீயும் வருகிறாய் அல்லவா ?'' என்றான் ராகவன்.

''கட்டாயம் வருகிறேன். எங்கே நீங்கள் என்னைக் கூப்பிடாமல் இருந்து விடுவீர்களோ என்று என்னுடைய நெஞ்சு 'திக், திக்' என்று அடித்துக் கொண்டிருந்தது!'' என்றான் சூரியா.

* * *

அன்று டில்லியைப் பார்க்கச் சூரியாவையும் அழைத்துக் கொண்டு சென்றது ராகவனுக்குச் சில விஷயங்களில் மிகவும் சௌகரியமா யிருந்தது. சீதா தன்னையே எல்லாக் கேள்விகளும் கேட்பதற்குப் பதிலாக மாற்றி மாற்றிச் சூரியாவையும் சில கேள்விகள் கேட்டாள். மிக உற்சாகமாகச் சூரியா பதில் சொல்லிக் கொண்டு வந்தான். வேடிக்கை பார்க்கப் போகும் இடங்களில் ஸ்திரீகளுடன் பேசுவதற்கும் அவர்களுடைய கேள்விகளுக்குப் பதில் சொல்லுவதற்கும் ஒரு தனிப் பொறுமையும் சாமர்த்தியமும் வேண்டும். ராகவனுக்கு அந்த ஆற்றல் இல்லை. சூரியாவுக்கு இருந்தது. இது ராகவனுக்கு மிகவும் சௌகரியமாயிற்று.

பழைய அரண்மனையையோ, மசூதியையோ, கோட்டையையோ பார்க்கப் போனால், ராகவன் ஓரிடத்தில் உட்கார்ந்து கொண்டு, ''நீங்கள் போய்ச் சுற்றிப் பார்த்துவிட்டு வாருங்கள்!'' என்று சொல்லி விடுவான். அவர்கள் சுற்றிப் பார்த்துக் கொண்டிருக்கையில் இவன் தன்னுடைய தனிப்பட்ட சிந்தனைகளில் மனத்தை ஈடுபடுத்திக் கொண்டிருப்பான். அப்படித் தனிப்படச் சிந்தனை செய்வதற்கு என்ன இருந்தது என்று கேட்டால், ஆம், ஒரு விஷயம் இருக்கத்தான் இருந்தது. அந்த இடங்களுக்கெல்லாம் முன்னொரு சமயம் யாரை அழைத்துக் கொண்டு வந்து பார்த்தானோ, அந்தப் பெண்ணைப்பற்றிய சிந்தனை தான்! அன்றைக்கு டில்லி ரயில்வே நிலையத்தில் தான் பார்த்தவள் தாரிணியா, இல்லையா? இல்லையென்றால், அவ்வளவு தத்ரூபமாகத் தாரிணியைப் போலவே எப்படி உருவம் பெற்றிருக்க முடியும்? இரண்டு பெண்களுக்குள் அவ்வளவு அபூர்வமான உருவ ஒற்றுமை இருக்க முடியுமா? தாரிணியாக இருந்தால், அவள் இறந்த செய்தி பொய்யாகத் தானே இருக்க வேண்டும்?

தாரிணியாகவே இருக்கட்டும், அல்லது அவளைப் போல் அபூர்வ உருவ ஒற்றுமை உள்ளவளாக இருக்கட்டும். அந்தப் பெண்ணை மறுபடியும் ஒரு தடவை சந்தித்து விசாரித்து உண்மையைத் தெரிந்து கொண்டாலன்றித் தனக்கு மன நிம்மதி ஏற்படாது என்று ராகவனுக்குத் தோன்றியது.

ஆனால் அவளை எப்படிச் சந்திப்பது? எங்கேயென்று தேடுவது? ஆக்ரா பக்கம் போகும் பாசஞ்சர் ரயிலிலேதான் அவள் ஏறியிருந்தாள் என்பது ராகவனுடைய



நினைவில் இருந்தது. ஒருவேளை ஆக்ராவிலேயே அவள் இருந்தாலும் இருக்கலாம். அல்லது ஆக்ரா போகும்போது வழியில் எங்காவது அவளைச் சந்திக்கலாம். யார் கண்டது? உலகத்தில் இதைக் காட்டிலும் அதிசயமான எத்தனையோ சம்பவங்கள் நடந்திருக்கவில்லையா?

இம்மாதிரியான பற்பல நோக்கங்களுடனே ராகவன் அடுத்த பௌர்ணமியன்று ஆக்ராவுக்குப் போவதென்று திட்டம் போட்டான்.

* * *

சூரியா வருகிறதாகச் சொன்னதும் ''நீங்களும் வருகிறீர்களா அம்மா?'' என்று ராகவன் கேட்க, ''போதும்! போதும்! இன்றைக்குப் பார்த்தது ஏழு ஜன்மத்துக்குப் போதும்! பிருந்தாவனம், வடமதுரை, காசி இப்படிப் புண்ணிய க்ஷேத்திரங்களுக்குப் போவதானால் சொல்லு! வருகிறேன். பாழுங் கோட்டையையும் இடிந்த மசூதியையும் பார்க்கப் போவதாயிருந்தால் நான் வரவில்லை! குழந்தையைப் பார்த்துக்கொண்டு வீட்டிலேயே இருக்கிறேன்'' என்றாள் காமாட்சி அம்மாள்.

''ரொம்ப சரி! நானும் அம்மாதிரிதான் எண்ணினேன். இந்தத் தடவை நாங்கள் ஆக்ராவுக்குப் போய்விட்டுத் திரும்பி விடுகிறோம். அப்புறம் ஒரு தடவை சூரியாவையும் உங்களையும் சேர்த்து க்ஷேத்திர யாத்திரைக்கு அனுப்பி விடுகிறேன். ஏன், சூரியா! என்ன சொல்கிறாய்? அம்மாவை அழைத்துக் கொண்டு போய் வருகிறாயா?'' என்று ராகவன் கேட்டான்.

''அதற்கென்ன ஆட்சேபணை? இந்தியாவின் புராதன க்ஷேத்திரங்களைப் பார்க்க வேண்டும் என்னும் ஆசை எனக்கும் இருக்கிறது. மாமியைப் போல் பக்தி உள்ளவர்களை அழைத்துப் போகக் கொடுத்து வைக்க வேண்டாமா?' என்று சொல்லிவிட்டுச் சூரியா புறப்பட்டான்.

அவன் போன பிறகு, ''ராகவா! சூரியா தங்கமான பிள்ளை; எனக்கு ரொம்பப் பிடித்திருக்கிறது; என் தங்கை பெண் அம்புஜத்துக்கு இரண்டு வருஷங்களாய் வரன் தேடிக் கொண்டிருக்கிறார்களே? நம்ம சூரியாவுக்குக் கொடுத்தால் என்ன?'' என்றாள் காமாட்சி அம்மாள்.

''கொடுத்தால் என்ன? திவ்யமாய்க் கொடுக்கலாம். நீங்கள் எப்போது தீர்மானித்து விட்டீர்களோ, அப்போது பாதிக் கல்யாணம் நடந்தது போலத்தான்! சூரியா சம்மதித்தால் பாக்கிப் பாதிக் கல்யாணத்தையும் செய்து விடலாம்.''

''எல்லாம் தானே சம்மதித்து விடுகிறான். அம்புஜத்துக்கு என்ன குறைச்சல்? கொஞ்சம் கறுப்பாயிருந்தாலும் முகத்தில் நல்ல களை. சூரியாதான் காங்கிரசில் சேர்ந்தவனாயிற்றே! அவன் அப்படி ஒன்றும் தகராறு பண்ண மாட்டான்.''

''சூரியா சம்மதித்தால் எனக்கு ஒரு ஆட்சேபமும் இல்லை. நான் குறுக்கே நிற்கவில்லை. தாராளமாக அம்புஜத்தைச் சூரியாவுக்குக் கல்யாணம் செய்து வையுங்கள்!''

''நம்ம சீதாவும் கொஞ்சம் என்னுடன் சேர்ந்து சொன்னால் சூரியா சம்மதித்து விடுவான்'' என்றாள் காமாட்சி அம்மாள்.

''அதென்னமோ அம்மா! சூரியாவுக்குக் கல்யாணப் பேச்சு அவ்வளவு பிடிக்கவில்லை போல் தோன்றுகிறது.. சூரியாவின் அம்மா யாரோ ஒரு பெண்ணை அவனுக்குப் பார்த்திருந்தாளாம். அது பிடிக்காமல்தான் சூரியா வீட்டில் சண்டை போட்டுக் கொண்டு வெளியே கிளம்பி விட்டான் என்று பிரஸ்தாபம். என்னைக் கேட்டால், கல்யாண விஷயத்தை மட்டும் அவரவர்களுக்கே விட்டுவிடுவது நல்லது என்பேன். தாயார் தகப்பனார் தலையிடவே கூடாது. இஷ்டப்பட்டவர்களைக் கல்யாணம் செய்து கொள்வதற்குத் தடை செய்யவும் கூடாது. இஷ்டப்படாதவர்களைக் கல்யாணம் செய்து கொள்ளும்படி வற்புறுத்தவும் கூடாது. அப்படி வற்புறுத்துகிற தாயார் தகப்பனாரைச் கண்ணும்புக் காளவாயில் போட்டுவிட வேண்டும்'' என்று சீதா ஆத்திரமாகப் பேசினாள்.

இவ்விதம் சீதா கூறியது இது இரண்டாவது தடவை. அதைக் கேட்டுக் காமாட்சி அம்மாளின் முகம் கருங்குவதை ராகவன் கவனித்தான்.

## 7. லலிதாவின் கடிதம்

''என் உயிருக்குயிரான தோழி சீதாவுக்கு லலிதா எழுதிக் கொண்டது. நீ டில்லிக்குப் போய்ச் சேர்ந்ததும் எழுதிய கடிதத்தைப் பெற்று அளவில்லாத மகிழ்ச்சி அடைந்தேன். அத்தனை தூரம் போன பிறகும் என்னை மறந்துவிடாமல் கடிதம் எழுதியிருக்கிறபடியால் நீதான் என் உண்மையான பிராண


CALCHEMICO'S
MOLOY
SANDAL TALC (Boratex)
Soft Soothing SANDAL Perfume
MOLOY
SANDAL SOAP
HLT 8471A




# பஜாஜ் விசிறிகள்

# வைபோகம்

# பஜாஜ் பஹார்

சீலிங் மற்றும் மேசை மின் விசிறிகள்

## வசதியில் ஒரு புதிய அனுபவம்






பஜாஜ் பியூடி மின் விசிறி 500 மிமி நீளம்








பஜாஜ் பியூடி மின் விசிறி 400 மிமி நீளம்



பஜாஜ் பியூடி மின் விசிறி 225 மிமி நீளம் இரட்டை வேகம்

MEMBER




**பஜாஜ் எலெக்ட்ரிகல்ஸ் லிமிடெட்**

45-47, வீர் நரிமான் ரோடு, பம்பாய்-1

இந்தியாவெங்கிலும் கிளைகள்

heros' BE-119 A TM

சிநேகிதி என்பதில் சந்தேகம் என்ன? நாம் இரண்டு பேரும் உயிரோடிருக்கும் வரையில் நம்முடைய சிநேகம் இப்படியே இருந்து வர வேண்டுமென்று கடவுளைப் பிரார்த்திக்கிறேன்.

புதிய இடத்தில் புதுக் குடித்தனம் போட்டதில் உனக்கு வேலை அதிகமாக இருந்திருக்கும். ஆகையினால்தான் இவ்வளவு கொஞ்சமாக எழுதி விட்டாய் என்று நினைக்கிறேன். வார்த்தைகளை எண்ணிப் பார்த்தேன். மொத்தம் முப்பத்தாறு வார்த்தைகள் இருந்தன. இவ்வளவு கொஞ்சமாக நீ இதற்கு முன் எப்போதும் எழுதியது இல்லை. புதுக் குடித்தனம் போடும் வேலை யெல்லாம் தீர்ந்ததும் நீ எப்போதும் போல் விவரமாகக் கடிதம் எழுதவேண்டும். ஏழெட்டுப் பக்கத்துக்குக் குறையக் கூடாது.

நான் ராஜம்பேட்டையிலிருந்து இந்தக் கடிதத்தை எழுதுவது உனக்கு ஒரு வேளை அதிக ஆச்சரியமா யிருக்கும்; ஒருவேளை அதிக ஆச்சரியமாயிராது. ஆனால் நீ கொஞ்சமாவது ஆச்சரியப்படுவாய் என்று நம்புகிறேன். நான் இங்கே எதற்காக வந்தேன் என்று தெரிந்தால் கட்டாயம் ஆச்சரியப்பட்டே தீர்வாய்.

சீதா! நான் சொல்லாமலே காரணத்தைக் கண்டு பிடி, பார்க்கலாம். கண்டுபிடிக்க முடியவில்லையா? ஒரு 'க்ளு' கொடுக்கிறேன். என்னுடைய கை ஒவ்வொன்றிலும் இப்போது அரை மணங்கு பளுவுள்ள வளையல்கள் ஏறியிருக்கின்றன. முழங்கை வரையில் வளையல் மயம்தான்!

இப்போது காரணம் தெரிகிறதா, சீதா! எனக்கு வளைகாப்புக் கல்யாணம் நடந்து நாலு நாள் ஆகிறது. வளைகாப்புக்காகத்தான் இந்த ஊருக்கு வந்தேன். அடுத்த மாதம் சீமந்தம் வைத்திருக்கிறது. அதற்குள் தேவபட்டணத்துக்குத் திரும்பிப் போக வேண்டும். சீமந்தக் கல்யாணம் புக்ககத்தில் தான் நடக்க வேண்டும் என்று உனக்குத் தெரியுமோ இல்லையோ?

என் அம்மா இப்போதுதான் உண்மையான சந்தோஷம் அடைந்திருக்கிறாள். நடுவிலே என்னை ரொம்பத் திட்டிக் கொண்டும் குறைப்பட்டுக் கொண்டும் இருந்தாள். 'உடன் ஒத்த பெண்கள் எல்லாரும் கையில் இரண்டு வயதுக் குழந்தையுடன் இருக்கிறார்கள்; நீ இப்படி மரமா யிருக்கிறாயே! ஜடமே' என்று ஓயாமல் பிடுங்கி எடுத்துக்கொண்டிருந்தாள். 'குழந்தை பிறப்பதும் பிறக்காததும் கடவுளுடைய செயல் அல்லவா?' என்று நான் எவ்வளவு எடுத்துச் சொல்லியும் அம்மாவின் மனமும் சமாதானம் அடையவில்லை. இப்போதுதான் அவளுடைய மனக் குறை தீர்ந்து சந்தோஷமா யிருக்கிறாள். என்னைத் திட்டாமலும் இருக்கிறாள். திட்டுவதற்குப் பதில் 'இந்தப் பெண் பெற்றுப் பிழைக்க வேண்டுமே? பிரசவத்துக்கு இங்கே அனுப்புவார்களோ, அனுப்ப மாட்டார்களோ தெரியவில்லையே! அம்பிகே, பராசக்தி!' என்று ஓயாமல் புலம்பிக் கொண்டிருக்கிறாள். ஓயாத புலம்பலாயிருந்தாலும் சந்தோஷமான புலம்பல்தான்.

சீதா! உனக்கு வளைகாப்பு, சீமந்தம் நடைபெறவில்லை என்பது எனக்கு ஞாபகம் வருகிறது. உன் அகத்துக்காரர் சீமந்தத்துக்காகச் சீமையி லிருந்து வர முடியாது என்று சொல்லி விட்டதாக எழுதியிருந்தா யல்லவா? உன் அகத்துக்காரர் அவ்விதம் எழுதியது எனக்கு ஒருவிதத்தில் நன்மையாக முடிந்தது. அதுவரையில் என் அம்மாவின் மனத்தில் உன்பேரில் கொஞ்சம் கோபம் இருக்கத்தான் இருந்தது. என்னைப் பார்ப்பதற்கு என்று வந்தவர் உன்னைக் கல்யாணம் செய்து கொண்டது பற்றித்தான் கோபம். ஆனால் உனக்குச் சீமந்தம் நடக்கவில்லை என்ற செய்தியை அறிந்ததும் அம்மாவுக்கு உன் பேரில் இருந்த கோபம் மாறிவிட்டது. 'அந்தப் பெண் சீதா இங்கே நல்ல வேளையாக இருந்தாளோ அப்பேர்ப்பட்ட மாப்பிள்ளை எனக்கு வாய்க்காமல் பிழைத்தேனே!' என்று உற்சாகத்துடன் அடிக்கடி சொல்லிக் கொண்டிருக்கிறாள்.

ஆனால் என் அம்மாவைப் போல் நானும் நினைப்பதாக நீ எண்ணிக் கொள்ளாதே! ஒரு நாளும் இல்லை. வளைகாப்பு நடக்கா விட்டால் என்ன, சீமந்தம் நடக்கா விட்டால்தான் என்ன? உன் கணவர் உன்னிடம் வைத்திருக்கும் அன்புக்கு ஈடு ஏது, இணை ஏது? புருஷனுடைய அன்பும் ஆதரவும் முக்கியமா? வளைகாப்பும் சீமந்தமும் முக்கியமா? சாஸ்திரம் என்பார்கள், சம்பிரதாயம் என்பார்கள்! 'சாஸ்திரமாவது, மண்ணாங் கட்டியாவது? வெள்ளைக்காரர்களும், கிறிஸ்தவர்களும் சீமந்தமா பண்ணிக் கொள்கிறார்கள்! அவர்களுடைய குழந்தைகள் நன்றா யில்லையா?' என்று சூரியா ஒரு சமயம் சொன்னான். அவன் சொன்னதை நானும் ஆமோதித்தேன். என்னுடைய அபிப்பிராயத்தில் கணவனுடைய அன்புக்கு மிஞ்சிய பாக்கியம் இந்த உலகத்தில் ஒன்றுமே யில்லை. இந்த விஷயத்தில் நீ மிக்க பாக்கியசாலி. நான் அவ்வளவு பாக்கியம் செய்யவில்லை.

இவ்விதம் நான் எழுதியதிலிருந்து என் கணவர் பேரில் நான் புகார் கூறுவ

தாக எண்ணாதே! இவர் என்னிடம் வைத்திருக்கும் ஆசைக்கும் அன்புக்கும் அளவே கிடையாது.

ஆனாலும் ஒரு விஷயத்தைச் சொல்லத்தான் வேண்டியிருக்கிறது. என் குறையை உன்னிடம் சொல்லாமல் வேறு யாரிடம் சொல்வேன்? என் ஆருயிர்த் தோழி! இத்தனை நாட்கள் சொல்லாததை, எழுதாததை இன்று தெரியப்படுத்துகிறேன். எவ்வளவோ இவர் என்பேரில் ஆசையுள்ளவராயிருந்தும் பல விஷயங்களில் அம்மாவுக்குப் பிள்ளையாயிருக்கிறார்! அம்மா இட்ட கோட்டை இவர் தாண்டுகிறதில்லை. மற்றக் காரியங்களில் அம்மாவிடம் பக்தியோடு இருக்கட்டும். நான் வேண்டாம் என்று சொல்லவில்லை. ஆனால் தாலி கட்டிய மனைவி விஷயத்திலே கூடவா அப்படி இருக்கிறது? அம்மா உத்தரவு கொடுத்தால்தான் என்னை எங்கேயாவது அழைத்துப் போவார். இதைப் பற்றி நான் எப்போதாவது குறை தெரிவித்துக் கொண்டால், 'உன்னிடம் எனக்குள்ள அந்தரங்க அன்பு உனக்குத் தெரியாதா? அம்மா இஷ்டப்படி நடக்காவிட்டால் வீட்டில் வீண் கலகம் ஏற்படும். பொறுத்தார் பூமி ஆள்வார்!' என்று உபதேசம் செய்கிறார்!

என் மாமியாரின் குணத்தைப் பற்றி முன்னமே குறிப்பாக எழுதியிருக்கிறேன், சீதா! கல்யாணத்தின்போது எவ்வளவு பரம சாதுவாயிருந்தாள்! அப்புறம் சீக்கிரத்தில் தன்னுடைய சொரூபத்தைக் காட்டிவிட்டாள். கல்யாணத்தின் போது சீர் வகையறா சரியாகச் செய்யவில்லை என்று இரண்டு வருஷம் சாந்திக் கல்யாணம் பண்ணாமலே வைத்திருந்தாள். அப்பா சரணாகதி என்று அவள் காலில் விழுந்து அவள் இஷ்டப்படியெல்லாம் சீர் செய்ய ஒப்புக் கொண்ட பிறகுதான் சம்மதம் கொடுத்தாள். சாந்திக் கல்யாணத்தின்போது அவள் இஷ்டப்படியெல்லாம் சீர் செய்த பிறகாவது சந்தோஷம் அடைந்தாளா? அதுவும் இல்லை. இத்தனை நாள் ஒருவரிடமும் சொல்லாததை உன்னிடம் இப்போது சொல்கிறேன், சீதா! என் மாமியார் ரொம்பப் பொல்லாதவள்! ராட்சசியேதான்! என்னை அவள் படுத்தி வைக்கிற பாட்டுக்கு அளவேயில்லை. ஓயாமல் ஒழியாமல், என்மேல் புகார் செய்துகொண்டிருப்பதே அவளுக்கு வேலை. நான் எது செய்தாலும் அவளுக்குப் பிசகாகப் படுகிறது. ஒரு காரியத்தைச் செய்யவில்லை என்றால் ஏன் செய்யவில்லை என்று கேட்கிறாள். 'சுயபுத்தி வேண்டாமா? எதுவும் ஒருவர் சொல்லித்தான் செய்ய வேண்டுமா?' என்கிறாள். நானாக ஏதாவது செய்து விட்டாலோ, 'உன்னை யார் செய்யச் சொன்னது? நான் ஒருத்தி இருக்கிறேனே, கேட்கக் கூடாதா?' என்கிறாள். தொட்டதற்கெல்லாம் எரிந்து விழுகிறாள். வேண்டாம் என்கிற நாட்டுப் பெண் கை பட்டால் குற்றம், கால் பட்டால் குற்றம் என்றும் படாமல் இருந்தாலும் குற்றம் என்பதாக இருக்கிறது. என்னுடைய நாத்தனார் ஒருத்தியைக் கொடுத்திருக்கிற இடத்தில் அவள் அவ்வளவாகச் சுகப்படவில்லையாம். அவளை ரொம்பக் கஷ்டப்படுத்துகிறார்களாம். அதற்கு நான் என்னடி செய்வேன்? அந்தக் கோபத்தையெல்லாம் என்பேரில் காட்டுகிறாள் என் மாமியார்! நன்றாயிருக்கிறதல்லவா?

இவர் இருக்கிறாரே, இவரைப் பற்றி என்ன சொல்வது என்றே எனக்குத் தெரியவில்லை. என் பேரில் ரொம்ப ஆசையாகத்தானிருக்கிறார். ஆனால் ஆசை மட்டும் இருந்து என்ன பிரயோசனம்? 'அம்மாவுக்கு இது பிடிக்காது; அம்மாவுக்கு அது வருத்தம் தரும்'— என்று ஓயாமல் சொல்லிக் கொண்டிருக்கிறாரே தவிர, ஏதடா, இவளும் ஒரு மனுஷிதானே என்று நினைத்துப் பார்ப்பதேயில்லை! தாயார் தகப்பனாரை விட்டு, அண்ணன் தம்பிகளை விட்டு, பிறந்த ஊரையும் வீட்டையும், தெரிந்த மனுஷாள் எல்லாரையும் விட்டு நம்மையே கதி யென்று நம்பி வந்தவளாயிற்றே என்று ஒரு தடவையாவது எண்ணிப் பார்த்திருப்பார் என்று தோன்றவில்லை. தேவ பட்டணத்தில் இத்தனை நாட்கள் இருந்தேனே? ஒரு நாளைக்கு என்னை இவர் ஒரு சினிமாப் பார்க்க அழைத்துப் போனதில்லை. ஒரு நாள் சாயங்காலம் என்னை இந்த ஊர் நந்தவனத்துக்கு அழைத்துப் போனதில்லை. பழைய காலத்து மனுஷர்களாயிருந்தால் கோயில்குளம், தேர் திருவிழாவுக்காவது அழைத்துப் போவார்களே? அதுவும் இல்லை. கொஞ்ச நாளைக்கு முன்னால் பண்டித ஜவாஹர்லால் நேரு இந்த ஊருக்கு வந்திருந்தார். அவருடைய பிரசங்கத்தைக் கேட்க ஊரெல்லாம் திரண்டு போனார்கள். நானும் வருகிறேன் என்று ஆனமட்டும் சொன்னேன். 'அம்மா கோபித்துக் கொள்வாள்' என்று சொல்லி விட்டுப் போய் விட்டார். எதற்கெடுத்தாலும் அம்மா, அம்மா, அம்மாதான்! எனக்கு ஒரு நாள் கோபமாயிருந்தது. எத்தனை நாள் என்னை இப்படி என்னை ஜெயிலில் வைத்திருக்கிறீர்கள்?' என்று கேட்டு விட்டேன். வழக்கம்போல் புன்சிரிப்புச்

உங்கள் குடும்பத்திற்கு
ஏற்றது
மிகச்சிறந்ததே!

COLGATE
DENTAL CREAM

# கால்கேட் டென்டல் க்ரீமின் மூலம் வாய் துர்நாற்றத்தைத் தடுத்திடுங்கள்... நாள்முழுவதும் பற்சிதைவை எதிர்த்திடுங்கள்!

கால்கேட் 10க்கு 7 பேர்களில் வாய் துர்நாற்றத்தை உடனடியாக அகற்றுகிறது என்றும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட் முறையில் பற்களைத் துலக்குவதால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பேரளவில் ஏராளமானவர்களுக்கு பற்சிதைவு தடுக்கப் படுகிறது என்றும் விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன. ஏனெனில், ஒரே தேய்ப்பில் வாய் துர்நாற்றத்தையும், பற்சிதைவையும் விளைவிக்கும் கிருமிகளை 85 சதவீதம் வரை, கால்கேட் டென்டல் க்ரீம் அகற்றி விடுகிறது.

அதன் விந்தைமிக்க பெப்பர்மின்ட் சுவையேதனி—கால்கேட் டென்டல் க்ரீம் கொண்டு குழந்தைகள் தவறாமல் பல்துலக்க விரும்புவதில் வியப்பென்ன!

தூய்மையான இனிய மூச்சுடனே, வெண்மையான பற்களையும் பெற்றிடவே...

**உலகிலேயே அதிக மக்கள் மற்றெந்த பற்பசையையும் விட, கால்கேட் பற்பசையையே வாங்குகிறார்கள்!**

பூரண பல்
பராமரிப்பிற்கு
**கால்கேட் டூத் பிரஷ்**
உபயோகியுங்கள்.
ஒவ்வொருவரின் தேவைக்கேற்றவாறு
அமைய—15 ரகங்கள்.

DC.G.49 TH

படித்தவர்கள்
பரவசமடைகிறார்கள் ...

பேராசிரியர் 'கல்கி' எழுதிய

**'பொன்னியின் செல்வன்'**

முடிவினைத் தொடர்ந்து

**விக்கிரமன்** எழுதிய

# நந்திபுரத்து நாயகி

சரித்திரத் தொடர் கதை

## அமுதசுரபி

சித்திரை இதழிலிருந்து
தொடர்ந்து வெளியாகிறது



- சித்திரை, வைகாசி இதழ்கள் கிடைக்காதவர்களுக்காக அந்த இதழ்களில் வெளிவந்த 'நந்திபுரத்து நாயகி' தொடர் கதைப் பகுதிகள் தனியே அச்சிடப்பட்டுள்ளன. 25 காசு வீதம் உங்களூர் ஏஜெண்டிடம் விற்பனைக்குக் கிடைக்கும். காரியாலயத்துக்கு நேரிடையே சந்தா அனுப்பிப் பதிவுசெய்து கொள்பவர்களுக்கும் அவை அனுப்பப்படும்.
- ஜூன் மாதக் கடைசிக்குள் ஆண்டுச் சந்தா அனுப்புபவர்களுக்கு ரூ. 2.- விலையுள்ள 'பொற்காலத்தின் கதை' எனும் சோழ சரித்திர நூல் இனாமாக அனுப்பப்படும்.

**ஆண்டுச் சந்தா ரூ. 9/- தனிப் பிரதி 75 காசு**

## அமுதசுரபி

**39/12, ஏரிக்கரைத் தெரு, சென்னை-33**

---

இன்றைய முன்னணி பிரபல

## பழனி டாக்டர் எஸ். காளிமுத்து

R. M. P. (Ind.) V. V. C., A. M. I. H.

**அவர்களின் விஜயம்**



**சந்திக்கும் விலாசங்கள்**

10-ந் தேதி திருப்பத்தூர் (N. A.): சங்கர் கபே பகல் 1 மணி முதல 2-30 மணி வரை.

10-ந் தேதி ஆம்பூர்: N. A. B. லாட்ஜ், மாலை 3-30 மணி முதல் 5 மணி வரை.

11ந் தேதி வேலூர் (N.A.): அஜீல் மேன்ஷன்ஸ் காலை 8 மணி முதல் 11 மணி வரை.

11-ந் தேதி குடியாத்தம்: அலங்கார் லாட்ஜ் பகல் 1 மணி முதல் 3 மணி வரை,

12-ந் தேதி பெங்களூர் ஸிடி: நியூ எவரெஸ்ட் ஹோட்டல், காலை 8 மணி முதல் மாலை 5 மணி வரை.

13-ந் தேதி கிருஷ்ணகிரி: ஸ்ரீ ராம் லாட்ஜ், காலை 8 மணி முதல் 10 மணி வரை.

13-ந் தேதி தர்மபுரி: சீனிவாசா லாட்ஜ் காலை 11 மணி முதல் 12 மணி வரை.

13-ந் தேதி சேலம்: லக்ஷ்மி ராஜபவன் லாட்ஜில், பகல் 2 முதல் 5 மணி வரை.

15-ந் தேதி ஈரோடு: நவபவனம் லாட்ஜ் காலை 8 மணி முதல் 12 மணி வரை.

15-ந் தேதி திருப்பூர்: ஸ்ரீ கிருஷ்ணா லாட்ஜில் பகல் 2 மணி முதல் 4 மணி வரை.

15-ந் தேதி பொள்ளாச்சி: ஹோட்டல் கீதாஞ்சலி, மாலை 5-30 மணி முதல் 7-30 மணி வரை.

16-ந் தேதி கோவை: விஜயா லாட்ஜ், காலை 8 மணி முதல் மாலை 3 மணி வரை.

17-ந் தேதி சென்னை: ஹோட்டல் ஸ்ரீலேகா மாலை 3 மணி முதல் 6 மணி வரை.

18-ந் தேதி சென்னை: ஹோட்டல் ஸ்ரீலேகா காலை 9 மணி முதல் பகல் 12 மணி வரை.

19-ந் தேதி பம்பாய்: சாரதா பவன் (மாதுங்கா), காலை 8 மணி முதல் மாலை 3 மணி வரை.

## பழனி சித்தர் வைத்தியசாலை

**போன்: 316] பழனி [தந்தி: சித்தர்**

சிரித்துவிட்டு, 'கொஞ்ச நாள் பொறுத்துக்கொண்டிரு. நாம் தனிக் குடித்தனம் போய்விடுவோம். அப்புறம் நீ வைத்ததுதான் சட்டம். இரண்டுபேரும் கைகோத்துக் கொண்டு தினம் தினம் தெருவில் ஊர்வலம் போவோம்' என்று சொன்னார். உண்மையாகத்தான் சொன்னாரா, பரிகாசத்துக்குச் சொன்னாரா என்று யோசித்து யோசித்துப் பார்க்கிறேன். நிச்சயம் தெரியவில்லை. இவர் தனிக் குடித்தனம் போவார் என்ற நம்பிக்கை எனக்கு உண்டாகவில்லை. ஒவ்வொரு சமயம் இவருக்கு என்னத்துக்கு இந்த வக்கீல் வேலை என்று தோன்றுகிறது. எங்கேயாவது தூர தேசத்தில், பம்பாய் — கல்கத்தா— டில்லியில், ஏதாவது ஓர் உத்தியோகம் சம்பாதித்துக் கொள்ளக் கூடாதா? என்று தோன்றுகிறது. நல்ல சமயம் பார்த்துச் சொல்லலாம் என்று இருக்கிறேன். என்னுடைய அதிருஷ்டம் எப்படி இருக்கிறதோ?

சீதா! நீ பாக்கியசாலி! எல்லா விஷயத்திலும் என்னுடைய நிலைமைக்கு நேர் மாறாயிருக்கிறது உன்னுடைய நிலைமை. உன்னுடைய மாமனாரும் மாமியாரும் உன்னைத் தாங்குகிறார்கள். தரையில் உன் கால் படக் கூடாது என்று அவ்வளவு அன்பாயிருக்கிறார்கள்; — உன் கணவரோ இந்தியாவின் தலைநகரத்தில் உத்தியோகம் பார்க்கிறார். கல்யாணம் ஆன உடனேயே டில்லிக்கு உன்னை அழைத்துப் போனாரே? இப்போது கேட்க வேண்டுமா? எல்லா இடங்களுக்கும் உன்னை அழைத்துப் போவார். தினம் தினம் சினிமாவுக்குப் போவீர்கள். ஏதோ நீயாவது இப்படிச் சந்தோஷமாக இருக்கக் கொடுத்து வைத்திருக்கிறாயே என்பதை எண்ணித்தான் இப்போதெல்லாம் நான் சந்தோஷப் பட்டுக் கொண்டிருக்கிறேன்.

இந்த ராஜம் பேட்டைக்கு வந்தது முதல் எனக்கு உன்னுடைய ஞாபகமே வந்து கொண்டிருக்கிறது. தினம் தினம் தபால் ரன்னர் 'ஜிங் ஜிங்' என்று மணி அடித்துக்கொண்டு வருகிற சத்தத்தைக் கேட்டதும், பம்பாயிலிருந்து உன் கடிதத்தை எதிர்பார்த்து நான் தபாலாபீஸுக்கு ஓடிய காலம் நினைவு வருகிறது. குளத்தங்கரைக்குப் போனால், படிக்கட்டுக்களில் உட்கார்ந்து நாம் மனோராஜ்யம் செய்ததெல்லாம் நினைவு வருகிறது. நீ சொன்ன கதையெல்லாம் ஞாபகம் வருகிறது. லைலா மஜ்னூன், அனார்க்கலி, ரோமியோ ஜூலியட், சகுந்தலை, சம்யுக்தை முதலியவர்கள் எதிரில் வந்து நிற்கிறார்கள்! அடியே! காதல் காதல் என்று சொல்லுவதெல்லாம் உண்மையில் உண்டா? அல்லது கதைகளிலே மட்டும்தானா? இத்தனை நாளும் இந்தியாவின் சக்கரவர்த்தியாயிருந்த எட்டாவது எட்வர்ட் ராஜா யாரோ ஒரு பெண்ணின் காதலுக்காக ராஜ்யத்தைத் துறந்து விட்டாராமே? இது உண்மையா, சீதா! இப்படியெல்லாம் நடக்கக் கூடும் என்று என்னால் நம்ப முடியவில்லையே?

நேற்று அம்மாவும் நானும் கண்டுவும் வண்டி கட்டிக் கொண்டு காவே

## 9. குத்துச் சண்டை (பாக்ஸிங்)

□ குத்துச்சண்டை ஆதிகாலம் தொட்டு வந்துள்ள விளையாட்டு. ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே சுமேரியர்கள் அந்தக் கலையில் தேர்ச்சி பெற்றிருந்திருக்கிறார்கள். கி. மு. 900ம் ஆண்டில் குத்துச் சண்டை கொடூரமானது எனக் கருதப்பட்டதன் காரணமாகச் சிறிது காலம் மறைந்திருந்தது.

□ ஏதென்ஸில் இரு பலசாலி இளைஞர்கள் குத்துச் சண்டைக்கு முதலில் முன்வந்தார்கள். இருவரும் அருகருகே அமர்ந்தார்கள். ஒருவர் மூக்கு மற்றொருவரோடு உரசியது. ஆட்ட ஆரம்ப சிக்னல் எழுந்ததும் ஒருவருக்கொருவர் தங்கள் முஷ்டியிருல் அடித்துக் கொண்டார்கள். இதில் ரசிகர்களுக்கு அவ்வளவு திருப்தியில்லை. கூர்மையான உலோக முட்கள் கொண்ட கையுறை அணிந்து ஒருவருக்கொருவர் ரத்தவிளாறாக அடித்துக் கொண்டபோது பலருக்கு அந்தக் கோரம் பிடித்திருந்தது. பின்னர் இது நாகரீகமல்ல என்று, கோரத்தை நீக்க ரப்பர் கையுறைகளை அணியச் செய்தார்கள்.

□ 1865ம் ஆண்டில் குயின்ஸ்பரி சட்டங்கள் உலகம் முழுதும் அமலுக்கு வந்து குத்துச் சண்டையில் கொடுமையை நீக்கி அதை ஒரு விளையாட்டாக்கி வைத்தது.

□ குத்துச்சண்டை வீரர்கள் அவரவர்களது எடைக்கேற்ப எட்டுப் பிரிவுகளாகப் பிரிக்கப்படுகிறார்கள்.

— குண்டுமணி

## தெரிந்த விளையாட்டு: தெரியாத விவரம்



ரிக்குக் குளிப்பதற்குப் போயிருந்தோம். போகும் போதும் வரும்போதும் உன்னுடைய நினைவாகவே இருந்தது. வழியில் மதகடியில் தபால்கார பாலகிருஷ்ணனுடன் சூரியா குத்துச் சண்டை போட்டுக் கொண்டிருந்த காட்சி அப்படியே எதிரில் நடப்பது போல் இருந்தது.

சீதா! சூரியா உங்களுடன் டில்லிக்கு வந்ததையும், வழியில் உங்களுக்கு ஒத்தாசையா யிருந்ததையும் உன் கடிதத்திலிருந்து அறிந்து மிகவும் சந்தோஷம் அடைந்தேன். ஒரு வேளை டில்லியிலேயே சூரியா தங்கிவிடலாம் என்று அவன் சொன்னதாக எழுதி யிருக்கிறாய். அப்படித் தங்கினால் எனக்குச் சந்தோஷமா யிருக்கும். ஏனென்றால், நீ அவனைக் கவனித்துக் கொள்வாய் என்கிற நம்பிக்கை எனக்கு உண்டு.

சூரியா ஏன் திடீரென்று படிப்பை விட்டு விட்டான்? ஏன் இப்படி உலகத்தையே வெறுத்தவன் போலப் பேசுகிறான் என்று கேட்டிருந்தாய். அப்போது எனக்குத் தெரியவில்லை. இந்தத் தடவை ராஜம்பேட்டைக்கு வந்த போதுதான் தெரிந்தது.

என் மூத்த தமையன் கங்காதரன் இருக்கிறானே, அவனை உனக்கு அதிகமாகத் தெரியாது. ஒரே ஒரு தடவை நம்முடைய கல்யாணத்தின்போது மட்டும்தான் நீ பார்த்திருக்கிறாய். கங்காதரனை எனக்கு எப்போதுமே பிடிக்காது. முரட்டுக் குணம். அவனால் நம்முடைய கல்யாணத்தின்போது ஒரு பெரிய சங்கடம் நேர்வதற்கு இருந்ததாம். குடியானத் தெரு ஆள் ஒருவனைச் சொன்ன உடனே ஏதோ ஒரு வேலையைச் செய்யவில்லை என்பதற்காகக் கங்காதரன் அடித்துவிட்டானாம். குடியானத் தெரு ஆட்கள் கட்டுப்பாடு பண்ண ஆரம்பித்து விட்டார்களாம். இதைத் தெரிந்து கொண்டு சூரியா குடியானத் தெருவுக்குப் போய் அண்ணாவுக்குப் பதிலாக மன்னிப்புக் கேட்டுக் கொண்டானாம். இதன்பேரில் குடியான ஆட்கள் சமாதானம் அடைந்தார்களாம்.

அடுத்த கோடை லீவுக்கு இரண்டு பேரும் ஊருக்கு வந்திருந்தபோது கங்காதரன் சூரியாவைச் சண்டை பிடித்தானாம். 'எனக்காக யாரடா உன்னை மன்னிப்புக் கேட்டுக்கொள்ளச் சொன்னது?' என்று. சூரியா ஏதோ பதில் சொன்னானாம். அதற்குப் பதிலாக அண்ணா அவனை அடித்தானாம். சூரியா அடியைப் பொறுத்துக் கொண்டு பொறுமையா யிருந்தானாம்.

இப்படிச் சூரியா இருந்தும் கங்காதரனுடைய கோபம் தீரவில்லை. மனஸ்தாபம் முற்றிக் கொண்டிருந்தது. போன வருஷம் சூரியா இங்கே வந்திருந்தபோது ஏதோ மனைக்கட்டுத் தகராறில் சூரியா குடியானவர்கள் கட்சி பேசினானாம். மறுபடியும் கங்காதரன், சூரியாவை அடித்து விட்டானாம். அக்கிரகாரத்தில் எல்லாரும் கங்காதரன் கட்சியாம். இதனால் சூரியா மனக் கசப்பு அடைந்து, 'உங்கள் சொத்துக்களை நீங்களே வைத்துக்கொள்ளுங்கள்; எனக்குப் பங்கு வேண்டாம்' என்று சொல்லி விட்டுக் கிளம்பி விட்டானாம். குடும்பத்துப் பணம் வேண்டாம் என்பதற்காகவே படிப்பையும் விட்டு விட்டானாம். இந்த விவரமெல்லாம் இந்தத் தடவை ராஜம்பேட்டைக்கு வந்தபோதுதான் எனக்கு நன்றாய்த் தெரிந்தது. ஏனெனில் அம்மாவும் அப்பாவும் ஓயாமல் சூரியாவைப் பற்றிப் பேசி, வருத்தப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். சில சமயம் 'உன்னால்தான் வந்தது', 'உன்னால்தான் வந்தது' என்று சண்டை பிடித்துக் கொள்ளுகிறார்கள்.

சீதா! எனக்குச் சூரியாவைப் பற்றி நினைக்க நினைக்க வருத்தமா யிருக்கிறது. சூரியா ரொம்ப நல்ல பிள்ளையடி! என்னிடம் அவனுக்கு எவ்வளவு ஆசை தெரியுமா? என்னிடம் மட்டும் என்ன? உன்னிடத்தில் கூட அவனுக்கு அவ்வளவு அபிமானம் உண்டு. டில்லியில் இருக்கும் வரையில் நீ அவனைக் கவனித்துக் கொள். வேளா வேளைக்குச் சாப்பிடச் சொல். சூரியாவை மட்டும் நீ கொஞ்சம் கவனித்துக் கொண்டால் என் அம்மாகூட உன் பேரில் ரொம்ப சந்தோஷப்படுவாள்.

இந்தக் கடிதம் ரொம்ப ரொம்ப நீளமாய்ப் போய் விட்டது. இதை நான் மூன்று நாட்களாய் எழுதி இன்றைக்கு முடிக்கிறேன். என் மனத்திற்குள் வெகு நாட்களாய் வைத்திருந்ததையெல்லாம் கொட்டி விட்டேன். புக்ககத்தில் இருக்கும்போது இவ்வளவு நீளம் கடிதம் எழுத எனக்கு அவகாசம் ஏது? மேலும் அங்கே இருக்கும்போது இதையெல்லாம் கடிதத்தில் எழுதவும் முடியாது. யாராவது பார்த்து விடுவார்களோ என்று பயமா யிருக்கும்.

ஏதாவது நான் அசட்டுத்தனமாக எழுதியிருந்தாலும் மன்னித்துக்கொள். இந்த உலகத்தில் என்னுடைய அருமைத் தோழி நீ ஒருத்திதான். உன்னிடம் என் மனத்தில் உள்ள குறையைச் சொல்லாமல் வேறு யாரிடம் சொல்வேன்? சீக்கிரம் விவரமாகப் பதில் எழுது.

இப்படிக்கு,
சதா உன் நினைவாகவே இருக்கும்
அன்பார்ந்த சிநேகிதி லலிதா.

(தொடரும்)



நா.பார்த்தசாரதி எழுதும்

# சத்திய வெள்ளம்

■ புதிய சமூக நாவல்

கல்கி இதழில்

9·7·72

■ ஆரம்பமாகிறது


பாலத்தின் விளிம்புக்கு மேலே எட்டிப் பார்த்த இரு முகங்களைப் பாக் சிப்பாய்கள் கவனிக்கவில்லை.


குறி தப்பாமல் கத்திகள் இரண்டு இருதயங்களுள் இறங்கின! அவர்கள் கூச்சலிடும் வரை அவர்களின் உயிர்கள் காத்திருக்கவில்லை!


சமிக்ஞை கிடைத்ததும் மற்ற தோழர்களும் மேலேறி வந்தனர்!
பாக்கி சிப்பாய்கள் பாலத்தின் அந்தக் கோடி முனையில் இருக்கிறார்கள் போலும். வெடியைப் பொருத்தினால் அவர்களை பிறகு கவனித்துக் கொள்ளலாம்! உம்... ஆகட்டும் வேலை.


பாலத்தின் பலவீனமான இடங்களில் வெடி மருந்துகள் வைக்கப் பட்டன. தலைவன் உத்தரவு பிறந்ததும்....




... தொலைவிலிருந்து விசையை இயக்க...


... பாலம் தகர்ந்தது!


முக்தி வாஹினி படையின் வெற்றிக் கூச்சல் அடங்குமுன் பாலக் காவலை மேற்பார்வையிட, பீரங்கி பொருத்தப் பட்ட ஜீப்பில் வந்த பாக் அதிகாரிகள், அவர்களைப் பார்த்து விட்டனர்.
முக்தி வாஹினி குள்ள நரிகள் பாலத்தைத் தகர்த்து விட்டு ஓட்டமெடுக்கின்றனர்! துரத்தியடி! சுட்டுத் தள்ளு!
தொடரும்...

படுசுட்டியான குடும்பம்!
எல்லோரும் என்னோட
ஜான்ஸன்ஸ்* எப்பவும்
உபயோகிக்கிறாங்க!




குழந்தைகளுக்கு உகந்தது,
உங்களுக்கும் சிறந்தது.

# 17. விடுமுறைக்கு விபத்து!



# "ஸைக்கோ" சாரநாதன்

நான் தகப்பனாரிடம் தனியாகப் பேசவேண்டும் என்று சொல்லி அவரை வாசலுக்கு அழைத்து வந்தான் ரங்கன். 'அப்படி என்ன ரகசியம்? அதுவும் மூன்றாவது நபர் ஒருவர் வந்திருக்கும்போது என்ன அவ்வளவு அவசரம்?' என்று நடராஜன் எண்ணிக் கொண்டார். அவன் செய்கை அவருக்குப் பிடிக்கவில்லைதான். ஆயினும் ரொம்ப முக்கியமான விஷயமாக இல்லாவிடில் தம் மகன் இப்படி அநாகரிகமாக நடந்துகொள்ள மாட்டான் என்பதும் அவருக்குத் தெரியும். ஆகவே ''எஸ்கியூஸ் மி'' என்று பிரமீளாவிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு வாசலுக்கு வந்தார். ''என்ன ரங்கா?''

''அப்பா! நீங்க பிரமீளாவோட அம்மாவைத் தேட வேண்டிய அவசியம் இல்லே. அவங்க இருக்கிற இடம் எனக்குத் தெரியும்!''

''ஓ! நீ அவங்களைச் சந்திச்சியா? நானும் பிரமீளாகிட்டே இதையேதான் சொன்னேன். 'மார்க்கெட் பக்கம் ஏதாவது ஷாப்பிங்குக்குப் போயிருப்பாங்க; சீக்கிரம் வந்துடுவாங்க'ன்னு. இதுக்குப் போய் இந்தப் பொண்ணு பயந்து காரைத் தானே ஓட்டிக்கிட்டு இங்கே வழியை விசாரிச்சுத் தெரிஞ்சுக்கிட்டு வந்திருக்கு.''

''ஏன் டிரைவர் என்ன ஆனான்?'' என்று கேட்டான் ரங்கன். ஸி. ஐ. டி.யின் மகனை அவன் சிந்தனைகளும் ஒன்றிலிருந்து ஒன்று கிளைத்துப் படரவே செய்தன. கேள்விகளைப் போட்டு விஷயங்களைக் கிரகிப்பதும், எதையும் தர்க்கரீதியாக அணுகுவதும் அவன் இயல்பாகவே ஆகிக் கொண்டு வருவதைத் தகப்பனாரும் கவனித்துத்தான் வந்தார். ஆனால் துப்பறியும் துறையில் அவனை ஈடுபடுத்துவது அவர் நோக்கம் இல்லையாதலால் அவனது இந்தத் திறமைக்கு அவர் என்றைக்குமே ஊக்கம் அளித்ததில்லை. அவன் பொறி இயல் துறையில் வல்லுநனாகிச் சொந்தத்தில் தொழில் நடத்த வேண்டும் என்பது அவர் ஆசை. ஆனால் இப்போது இவனே நேரடியாக இந்தக் குழப்பமில்லாத மர்மத்தில் — பிரமீளாவின் அம்மா காணாமல் போன சிக்கலற்ற கேஸில் — சம்பந்தப்பட்டிருக்கிறபடியால் பொறுமையாகப் பதில் சொல்லிவிட வேண்டியதுதான் என்று தமக்குத்தாமே வேடிக்கையாக எண்ணிக்கொண்டு பதிலிறுத்தார்:

''டிரைவரோட பெண்டாட்டிக்கு உடம்பு சரியில்லேன்னு தந்தி வந்ததாம். பார்த்துட்டு ஒருவாரத்திலே திரும்பி வந்துடறதாகச் சொல்லிட்டுப் போனானாம். இந்தப் பெண்ணுக்குப் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய் அம்மாவைக் காணோம்னு ரிப்போர்ட் பண்ண மனசு வரலே. நான் கொடைக்கானல் வந்திருப்பதாகக் கேள்விப்பட்டு நேரே என்கிட்டேயே வந்துட்டாள். தன்னுடைய அந்தஸ்துக்கு என்கிட்டே வந்தால்தான் பொருத்தம் என்று நினைச்சாளோ? அல்லது என்னிடம் காரியத்தை ஒப்படைச்சுட்டா அவள் அம்மா சீக்கிரமா அகப்பட்டுவிடுவாங்கன்னு எண்ணினாளோ; ஆகமொத்தம் ஒரே புலம்பல். 'என்கிட்ட சொல்லிக்காமல் அம்மா எங்கேயுமே வெளியே கிளம்பறதில்லே; லஞ்ச் டைம் வரைக்கும் காத்திருந்து பார்த்தேன்; அம்மா திரும்பி வரலே; எனக்குச் சாப்பாடே இறங்கலே; காரைக் கிளப்பிக்கிட்டு வந்துட்டேன்' என்கிறாள். எப்படியோ அவள் கவலையைத் தீர்க்கிற மாதிரி செய்தி கொண்டு வந்திருக்கே. உள்ளே வந்து தைரியம் சொல்லி அனுப்பு!''



கி.ராஜேந்திரன்

''அப்பா! ஐ ஆம் ஸாரி. என்னைத் தப்பாய்ப் புரிஞ்சுக்கிட்டீங்க. உங்க ஹாலிடேக்கு மறுபடியும் ஆபத்து வந்துட்டதுன்னு நான் சொல்றேன்.''

அவர் நெற்றி சட்டென்று சுருங்கப் புருவங்கள் நெரிந்தன. அவன் கூறியதை அவர் சற்றும் ரசிக்கவில்லை. ஆயினும் ரங்கன் விளையாட்டாகப் பேசவில்லை என்பதும் அவருக்குப் புரிந்தது. கண்களை மூடிக்கொண்டு உண்மைகளைப் பார்க்க மறுப்பதால், ஒதுக்கித் தள்ளுவதால் யாருக்கு என்ன லாபம்? கடமையைச் செய்வதிலிருந்து தாற்காலிகமாக விடுதலை பெறலாம்; ஆனால் அப்போதும் ஜெயிலிலிருந்து தப்பி வந்தவனின் மனநிலையில்தான் தவிக்க வேண்டியிருக்கும். அதைவிட எதிர்ப்படுகிற தொல்லையைச் சந்தித்துச் சமாளிப்பதே மேல்.

''ரங்கா! நேரடியாக விஷயத்துக்கு வா! எனக்கு அதிர்ச்சி அளிக்க வேண்டி யிருக்குமோ என்று நீ தயங்கத் தேவை யில்லை.''

''கனகம் இருக்கும் இடம் எனக்குத் தெரியும்னு சொன்னேன். ஆனால் அவளை நான் சந்திக்கவில்லை. அனசூயாதான் பார்த்தாள்'' என்று தொடங்கி ரங்கன் சற்று முன்னால் கோக்கர்ஸ்வாக்கில் நடந்தவற்றைச் சுருக்கமாக எடுத்துரைத்தான்.

''அப்பா! அந்தப் பக்கம் ரொம்ப ஆழம் தான். ஆனால் தெய்வச்செயலாக அனசூயா தப்பிப் பிழைச்சாள். உடம்பிலே கொஞ்சம் ரத்தக் காயத்தோடு சரி. சற்றுக் கனமான பேர்வழியாக இருந்திருந்தால் கிளைகளும் புதர்களும் வளைந்து கொடுத்து வழி விட்டு அதள பாதாளத்துக்கு அனுப்பி வைச்சிருக்கும். ஏன், அனசூயாவே கூட மலைச்சரிவின் ஓரமாகத் தடுமாறி விழுந்ததால்தான் இன்னும் முழுசா இருக்காள். கொஞ்சம் வேகமாகப் பாய்ஞ்சிருந்தால்—அதாவது அந்தப் புதர்கள் வளர்ந்திருக்கும் எல்லைக்கு அப்பால் போய் விழுந்திருந்தால் அவளைப் பறி கொடுத்துட்டுத்தான் நிற்போம். புதர்களும் ஒருசில சின்ன மரங்களின் கிளைகளும் மூன்று நாலு அடி நீளத்துக்குத்தான் அந்தச் சரிவில் பக்கவாட்டில் வளர்ந்திருக்கின்றன. எப்படியோ அவளைக் காப்பாற்றி விட்டேன். ஆனால் அப்போ கூட கனகத்தை நான் பார்க்கலை.''



''உன் முழுக் கவனமும் குழந்தையை மீட்பதிலேயே இருந்ததால் கவனிக்கத் தவறியிருக்கலாம்.''

''ஒருவேளை புதர்களும் மரக் கிளைகளும் என் பார்வையிலிருந்து அவளை மறைத்திருக்கலாம். அனசூயா தொங்கிக் கொண்டிருந்த கோணத்திலிருந்து மட்டுமே அவள் உடலைப் பார்க்க முடியுமாக இருந்திருக்கலாம். அனசூயா மேலே வந்த பிறகு சொன்னாள், இவள் தொங்கிக் கொண்டிருந்த இடத்திலிருந்து கொஞ்ச தூரத்தில் கனகம் விழுந்து கிடப்பதாக. விழிகள் பிதுங்கிக் கொண்டிருப்பதாயும் உடல் அசைவற்றுச் செத்துப் போனது போல் இருப்பதாயும் கூடச் சொன்னாள்.''

''என்ன கஷ்டம்! அந்தப் பக்கம் துருத்திக் கொண்டிருக்கிற பாறை எதன் மீதாவது விழுந்து கிடக்கிறாளோ, அல்லது துணி

உலர்த்தியது போல் கனமான மரக்கிளை ஒன்றின் மேல் மடிந்து விழுந்திருக்கிறானோ? இருந்தாலும் இரண்டு பேரும் கிட்டத்தட்ட ஒரே இடத்தில் விழுந்தது அதிசயம்தான். அதைவிட ஆச்சரியம் ஒரு குழந்தை உயிருடன் இருக்க வயதான மற்றொருத்தி இறந்து கிடப்பது.''

''அனசூயாவைப் போல் கனகம் தவறி விழுந்திருப்பாள் என்று எனக்குத் தோன்றவில்லை, அப்பா!''

''ஏன் அப்படிச் சொல்கிறாய்?''



''சரிதான், 'எலிமெண்டரி மை டியர் வாட்ஸன்' என்று நான் உங்களுக்கு விளக்குவதா?''

''பரவாயில்லை பேசு.''

''அவள் விழுந்து கிடக்கும் இடம் அப்படி ஒன்றும் ஆழம் இல்லை. சரிவில் துருத்திக் கொண்டிருக்கும் ஒரு பாறை மேல் அவள் விழுந்திருப்பதாகக் கொண்டாலும், கைகால் முறிந்திருக்குமே ஒழிய உடனே மரணம் நேர்ந்துவிடாது. கூச்சல் போட்டு ரகளை செய்திருப்பாள். ஆகவே யாராவது அவளைக் கொன்ற பிறகு அங்கே உருட்டித் தள்ளியிருக்க வேண்டும். ஆறாயிரம் அடி பள்ளம் என்று 'கைடு' புத்தகங்களில் படித்திருப்பதால் அத்தனை ஆழத்துக்கு உடல் சென்றுவிடும், அதை யாருமே கண்டுபிடிக்க முடியாது; கனகம் உயிரோடு இருக்கிறாளா அல்லது செத்தாளா என்றே தீர்மானமாகாதபோது அவளைக் கொன்றதாக நம் பேரில் சந்தேகம் ஏதும் ஏற்படாது, நிலைக்காது என்றெல்லாம் அவளைக் கொன்றவன் திட்டம் போட்டிருக்க வேண்டும். ஆனால் அத்திட்டத்தை நிறைவேற்றும்போது அந்த உடல் மரக்கிளையாலோ அல்லது பாறையாலோ தடுக்கப்பட்டுப் பத்துப் பன்னிரண்டு அடி ஆழத்திலேயே நின்று போகும் என்பதை அவன் கணித்திருக்க மாட்டான்.''

''உன்னுடைய 'ரீஸனிங்' சரியாகத்தான் இருக்கு ரங்

கன். ஆனால் கொலைகாரன் என்று குறிப்பிட்டாய். கொலைகாரியாகவும் இருக்கலாம் இல்லையா?''

''நான் அவ்வளவு ஆழ்ந்து யோசிக்கலே, பேச்சுக்குச் சொன்னேன், அவ்வளவுதான்.''

நடராஜன் தலையாட்டினார். ''ரெச்சட் பிஸினெஸ். இத்தனை அருவருப்புக்கும் இடையில் ஒரே ஒரு சின்ன ஆறுதல். கால்ஃப் லிங்க்ஸ் பக்கத்திலே ராக் ஆஃப் விஷனிலேயிருந்து ஒரு போலீஸ்காரரைக் கயிற்றைக் கட்டி இறக்கவேண்டியிருந்தது, செத்துப்போன தினகரனைச் சோதிக்க. இங்கே அந்தத் தொல்லை இல்லை. பத்துப் பன்னிரண்டு அடி ஆழத்தில்தான் அவன் விழுந்து கிடக்கணும்னு நீ சொல்றதாலே சுலபமா உடலை மேலே கொண்டுவந்துவிடலாம்.''

''அப்பா! கொலைகளை நீங்க நிறையப் பார்த்துட்டீங்க, நானும் உங்ககிட்ட வர்ற கேஸ்களையெல்லாம் நீங்க எப்படி விடுவிக்கிறீங்க என்கிறதைக் கவனிச்சுக்கிட்டே வந்திருக்கேன். இதனாலேயே நமக்கு மரத்துப் போயிடுச்சு. இறந்து போனவனோட மகள் உள்ளே உட்கார்ந்து தன் தாயாருக்கு நேர்ந்த கதி என்னன்னுகூடத் தெரியாமெ அழுதுக்கிட்டிருக்கா. நாம் அதை மறந்துட்டுக் 'கூலா' இந்தக் கேஸைக் கூறு போட்டு ஆராய்ஞ்சுக்கிட்டிருக்கோம்!''

''நெசந்தான்'' என்றார் நடராஜன். ''இந்த விஷயத்தைப் பிரமீளாவிடம் நாம் மெல்லச் சொல்லிவிட வேண்டியது தான். நீ என்னைத் தனியா அழைச்சுக்கிட்டு வந்தபோதே ஏதோ விபரீதம்னு அவள் முடிவு கட்டியிருப்பாள். என்றாலும் உண்மை நிலவரம் தெரிஞ்சதும் அவள் புலம்பித் தீர்க்கும்போது அவளைச் சமாளிக்க உன் உதவியும் எனக்குத் தேவைப்படும். வா, போகலாம்.''

இருவரும் மீண்டும் உள்ளே பிரமீளா காத்திருந்த அறைக்குள் சென்றனர்.

# 18. கொலைக்கானல்!

குறிஞ்சி ஆண்டவர் கோயில் சிறியது தான். ஆயினும் அது துப்புரவாக இருந்ததால் விசேஷ அழகு பெற்றுத் திகழ்ந்தது. வெளி மதிலைத் தாண்டி உள்ளே நுழைந்ததுமே இதயத்துக்கு இதமளித்தது. பிராகாரத்தை வலம் வந்து அனசூயா பேரில் ஓர் அர்ச்சனையும் செய்து பிரசாதம் பெற்றுக் கொண்டார்கள். விக ஒருவனைத் தவிர மற்ற அனைவரும் தனித் தனியே அனசூயாவுக்கு நெற்றியில் விபூதி இட்டுத் தலையிலும் இலேசாகத் தூவினர். அனசூயாவுக்கு இப்படி எல்லாரும் தன்னிடம் விசேஷ அக்கறை காட்டுவது சற்றுப் பெருமையாக இருந்தது.

வெளியே வந்தபோது ஒரு சாமியார் பழனிக் குன்றைக் காட்டுகிறேன் என்று சொல்லிக் காசு கேட்டார். மேகமூட்டமாக இருந்ததால் பழனி தெரியவில்லை. ஆயினும் அவர் காட்டிய திக்கு நோக்கிக் கும்பிட்டுவிட்டுச் சில்லறை கொடுத்தார் பத்மநாபன். அப்போது அவர் இருந்த மனநிலையில் பழனி இருந்த திசைக்கு நேர் எதிர்த் திசையைக் காட்டியிருந்தால்கூடக் கன்னத்தில் போட்டுக் கொண்டு காசும் கொடுத்திருப்பார். எமன் வாயிலிருந்து மகள் மீண்டதானது அவர் உள்ளத்தை அவ்வளவு தூரம் கலக்கிவிட்டிருந்தது. இன்னொரு பக்கம் ஆண்டவனிடம் நன்றி உணர்ச்சியும் பக்தியும் பெருகிற்று.

''இங்கிருந்து பார்த்தால் பழனி தெரியும் என்கிறாரே, அதேபோல் கோக்கர்ஸ் வாக்கிலிருந்து பார்த்தால் மதுரை தெரியுமாம்'' என்றாள் மீனு. ஏதோ ஒரு புத்தகத்தில் படித்த ஞாபகத்தில் அவள் பேசினாள். ''நாம்தான் அவசரப்பட்டு எதையும் பார்க்காமல் அங்கேயிருந்து கிளம்பி வந்துவிட்டோம்.''

'கோக்கர்ஸ் வாக்குக்கு இன்னொரு தடவை வரலாம்' என்று ரங்கன் சொல்லிவிட்டிருந்ததால் எப்படியாவது அவனுடைய அந்த ஆசை நிறைவேற வேண்டும் என்ற ஆர்வத்துடன் அவள் இருந்தாள். அவன் தனியே போய் வந்துவிடலாம்தான். ஆனால் கூடத் தான் இருக்க முடியவில்லையே என்ற ஆதங்கம் இல்லாமலா போகும்? அப்பாவும் அம்மாவும் மீண்டும் அந்தப் பக்கம் எட்டிக்கூடப் பார்க்கமாட்டார்கள் என்று அவளுக்குத் தோன்றியதால் ஏமாற்றமும் ஏக்கமும் நெஞ்சைக் கவ்வின.



''பைனாகுலர்ஸ் இருந்தால்தான் மதுரையை அங்கேயிருந்து பார்க்கலாம்'' என்றார் சாமியார். ''ஆனால் ஒரு தடவை பார்த்த பிறகு வெறும் கண்ணுக்கே கூடத் தெரியும்!''




# மினர்வா துணை நூல்கள்

## உயர்நிலைப்பள்ளி இறுதித் தேர்வு-1973
## (S.S.L.C. Examination - 1973)

| மினர்வா துணை நூல்கள் | | விலை ரூ. பை. |
|---|---|---|
| ஆங்கிலம் (முதல் தாள்—Prose & Poetry) | | 2-50 |
| —(இரண்டாம் தாள்) | | 2-00 |
| தமிழ் (இரண்டு தாள்களுக்கும் உரியது) | | 3-00 |

**பொதுவியல் பாடங்கள் (தமிழில்)**

| | | |
|---|---|---|
| விஞ்ஞானம் | ... | 2-00 |
| சரித்திரம் | ... | 2-00 |
| பூவி இயல் | ... | 2-00 |

**சிறப்புப் பாடங்கள் (தமிழில்)**

| | | | |
|---|---|---|---|
| உயிரியல் (Biology) | X | வகுப்புக்குரியது | 2-50 |
| | XI | ,, | 3-00 |
| இரசாயனம் (Chemistry) | X | வகுப்புக்குரியது | 2-50 |
| | XI | ,, | 3-00 |
| பௌதிகம் (Physics) | X | வகுப்புக்குரியது | 2-50 |
| | XI | ,, | 3-00 |
| சரித்திரம் (History) | X | வகுப்புக்குரியது | 2-50 |
| | XI | ,, | 3-00 |



உங்கள் பிரதிகளுக்கு இன்றே எழுதவும்:

# மினர்வா பதிப்பகம்

24, ஆல்ஸ் சாலை
எழும்பூர் - சென்னை-8

அல்லது

**பி. டி. பெல் & கம்பெனி**
7, சங்குராம செட்டித் தெரு, சென்னை-1

---

அரியதோர் இலக்கிய நூல்

# காவ்ய ராமாயணம்

**கே. எஸ். ஸ்ரீநிவாஸன்**
எழுதியது

'மிகவும் சிறந்த ஆராய்ச்சி'
—நாமக்கல் கவிஞர்

'வால்மீகி, கம்பன், இருவரது அருமை பெருமை, நுண்மை திண்மைகளையும் தேறத் தெளிந்து ராமாயணக் கதையைக் கூறுகிறார், தமது நயம் பொருந்திய விமரிசனங்களோடு' '—கல்கி'

**விலை ரூ. 12/-**

எஸ். சுகுமார்
193, பாரதிநகர், புது டில்லி-3
மற்றும்
பாரி நிலையம், ஹிக்கின்பாதம்ஸ்

---

# மூல நோயை

முற்றவிடாமல்
நம்பிக்கையான
**ஹெடன்ஸா**
களிம்பு
உபயோகித்து
நிவாரணம்
அடையுங்கள்;
—ரண
சிகிச்சையையும்
தடுங்கள்

Bensons-2141 TAM

டாக்டர், நீங்கள் சொன்னது முற்றிலும் உண்மை.
இப்போதெல்லாம் எங்கள் குடும்பத்தில்
அனைவரும் மிகுந்த துடிதுடிப்புடன் இருக்கின்றனர்...

## 'ஆம் ஜானகி, எனக்குத் தெரிந்த ஆரோக்கியமுள்ள குடும்பங்களில் அனைவரும் 'ஹார்லிக்ஸ்' பருகுகின்றனர். ஊட்டத்தின் முக்கிய . ஆதாரமே அதுதான்'

என்கிறார் ஜானகியின் டாக்டர்.

அவர் 'ஹார்லிக்ஸ்' தரும் சிறந்த ஊட்டத்தின் குணங்களைப்பற்றி நன்கு அறிந்தவர். ஜீவாதாரமான புரதம் மற்றும் பால், கோதுமை, மால்டெட் பார்லி, இவை தரும் ஊட்டச் சிறப்பும் இயற்கைச் சத்துக்களும் அடங்கியதால் 'ஹார்லிக்ஸ்' நிகரற்று விளங்குகிறது. உதாரணமாக, பாலிலிருக்கும் ஊட்டச் சத்தை இருமடங்காகப் பெருக்குகிறது 'ஹார்லிக்ஸ்'.

குடும்பத்தினரின் ஆரோக்கியத்தைப் பொறுத்த வரையில் மிகச் சிறந்ததென கருதப்படுவது 'ஹார்லிக்ஸ்' தான்.

'ஹார்லிக்ஸ்'—ஒரு பதிவு பெற்ற ட்ரேட் மார்க்.



ஹார்லிக்ஸ்'—ஒரு பதிவு பெற்ற ட்ரேட் மார்க்

**முழுமையான ஊட்டம் பெற-'ஹார்லிக்ஸ்'**



**மஞ்சள் காமாலைக்கு மருந்து**

கொட்டைப் பாக்குக்கு மேல் சிறிய எலுமிச்சங்காய் அளவு புளி இருந்தாலும் பரவாயில்லை. அதை ஓர் அவுன்ஸ் நீரில் கரைத்து வடிகட்டி ஒரு சுண்டைக்காய் அளவு சுண்ணாம்பைக் கரைத்து, காலை, பகல், மாலை தினம் மூன்று வேளை சாப்பிடவும். அதற்கு மேலே இரண்டு அவுன்ஸ் சுத்த நீரை அருந்தவும். மூன்று நான்கு நாட்கள் மருந்து உட்கொள்ள வேண்டும். எவ்வித பத்தியமுமில்லை. அதிக காரம், புளி, உப்பு குறைத்து, பால், தயிர் அதிகம் உட்கொள்ளவும். இப்படி செய்தால் மஞ்சள் காமாலை குணமாகிறது என்கிறார் திருவொற்றியூர் காந்தி மருத்துவமனை டாக்டர் பண்டிட் பி. வி. சர்மாஜி.

'' அம்மா! கொஞ்ச நேரம் முன்னாடி நாம போயிருந்தோமே? அனு அக்காகூடக் கீழே விழுந்துட்டாளே! அந்த இடத்திலேயிருந்து பார்த்தபோது கார், லாரி, பஸ் எல்லாம் என்னோட பொம்மைக் கார் மாதிரி இருந்தது. குட்டி குட்டியா!'' என்றான் விசு.

'' தேவலையே! எங்களை விடக்கூட நீதான் எல்லாத்தையும் சரியாக் கவனிச்சுப் பார்த்திருக்கே! இவ பண்ணின கலாட்டாவிலே அதெல்லாம் ஒண்ணும் என் கண்ணிலே தென்படவேயில்லை '' என்றாள் அம்புஜம்.

'' ரோடு வளைஞ்சு வளைஞ்சு போச்சும்மா. அதும் மேலே லாரி, கார் எல்லாம் வந்தது; நான் பார்த்தேன் '' என்றான் விசு மேலும் உற்சாகம் பெற்று.

'' ஆதிசேஷனே வந்து மலைகளைச் சுற்றி வளைச்சுண்ட மாதிரிதான் உயரேயிருந்து சாலைகளைப் பார்த்தால் தோன்றும்'' என்றார் பத்மநாபன்.

'' நாம்தான் எதையுமே சரியாப் பார்க்கலையே?'' என்றாள் மீனு மறுபடியும்.

''பார்க்காத போனால் என்ன? இந்த மட்டும் தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போச்சேன்னு சந்தோஷப்படுவியா.... என்னமோ குறைப்பட்டுக்கறியே?''

'' தலைப்பாகைக்குக்கூட அதிகச் சேதமில்லை. அனுவின் உடம்பிலே கொஞ்சம் சிராய்ச்சிருக்கு. அவ்வளவுதான். ஹோட்டல் அறைக்குப் போய் பர்னால் தடவினால் சரியாப் போயிடும், சாயங்காலத்துக்குள்ளே '' என்றாள் மீனு.

'' இப்போ என்னமோ தைரியமாப் பேசிண்டு நடக்கிறோமே, அந்தச் சில நிமிஷங்கள் எப்படி ஜில்லிட்டுப் போச்சு உடம்பு'' என்றாள் அம்புஜம்.

பத்மநாபன் கூறினார்: ''சாயங்காலம் ஏரிப் பக்கம் போறச்சே கனகத்தை நேரிலேயே ஒரு தரம் இவளுக்குக் காண்பிச்சுட்டால் போறது; பிரமையெல்லாம் ஓடிப் போயிடும்.''

'' இப்போ அதை எதுக்கு மறுபடியும் ஞாபகப்படுத்தறேள்? குழந்தை அதையெல்லாம் ஏற்கனவே மறந்துட்டுச் சமர்த்தாகத்தானே இருக்காள்'' என்று கடிந்து கொண்டாள் அம்புஜம்.

டாக்ஸியில் ஏறுவதற்கு முன்னால் கடைசியாக ஒரு தடவை குறிஞ்சி ஆண்டவன் சந்நிதி இருந்த திசை நோக்கிக் கும்பிட்டாள் மீனு. கோயிலுக்குள் இருந்தபோது தங்கையைப் பற்றிய நினைவு நீங்கலாக வேறு எதைக் குறித்தும் சிந்திக்காத அவள், இப்போது கடைசி விநாடியில் தனக்கெனப் பிரார்த்தித்துக் கொண்டாள். சுயநலனுக்கான பிரார்த்தனைதான் என்றாலும் அதில் இன்னொரு ஜீவனையும் பின்னிப் பிணைத்ததும் அதே சுயநலம்தான்.

ஹோட்டலுக்கு வந்து சேர்ந்து டாக்ஸிக்குப் பணம் கொடுத்துவிட்டுத் திரும்பிய பத்மநாபன் பக்கத்தில் ஒரு காரின் கூரை மேல் பொருத்தப்பட்டிருந்த 'காரியரி'ல் பெட்டி படுக்கைகள் அடுக்கப்படுவதைப் பார்த்தார். அக்காரியத்தில் ஈடுபட்டிருந்தவர், பத்மநாபன் தங்கியிருக்கும் அறைக்குப் பக்கத்து அறையில் இருப்பவர்தாம். அடுக்கிய சாமான்களை இப்போது கயிற்றைப் போட்டுக் கட்ட ஆரம்பித்திருந்தார் அவர். கணவன், மனைவி இரண்டே பேர். இரண்டு நாட்களுக்கு முன்னால்தான் வந்தார்கள். அதற்குள் கிளம்புவானேன்? ஒருவேளை விசுவும் அனுவும் அடிக்கும் லூட்டியைத் தாங்கமுடியாமல்தான் கிளம்பி விட்டார்களா? காரணம் அதுவென்றால் வேறு அறை கேட்டுக் கொண்டு போகலாமே? ஊரைவிட்டே புறப்படுவானேன்? பெட்டி பெட்டியாகச் சிறிய சிறிய கட்டடங்களை இந்த ஹோட்டலில் தனித் தனியே அமைத்திருப்பதால் மாற்று அறை கேட்டு




(36-ம் பக்கம் பார்க்க)

நம்மைவிட்டு வெகுதூரம் போய்விட லாமே ? ஒருவேளை வேறு அறை ஏதும் காலி இல்லை என்று முதலாளி தனராஜ் கூறிவிட்டாரோ ? இவர் இவ்வளவு சீக்கிரம் புறப்பட நமது குழந்தைகள் தான் காரணம் என்றால் மன்னிப்புக் கேட்பது முறையல்லவா ?'

இப்படியெல்லாம் எண்ணமிட்டவ ராக ஓரளவு வியப்புடன் பத்மநாபன் வினவினார்: ''என்ன ஸார்! கிளம்பி யாச்சா அதற்குள்? வந்து இரண்டு நாட்கள்தானே இருந்தீங்க?''

''சீக்கிரமா எமலோகப் பட்டணத் துக்குப் போறதைவிடச் சீக்கிரமா சென்னைப் பட்டணத்துக்குப் போய்ச் சேருவது மேலில்லையா ஸார் ?'' என் றார் அவர்.

அவர் கிருதக்காகப் பேசுவதாக நினைத்தார் பத்மநாபன். ''ஏன் ஸ்வாமி கோவிச்சுக்கிறீங்க? சகஜமா கேட்டேன். பிடிக்கலேன்னு சொல்லிட் டுப் போங்களேன்'' என்றார் மனத் தாங்கலுடன்.

''அடடா ! எனக் கொண்ணும் கோபமில்லை ஸார் ! நான் இங்கே உள்ள நிலவரத்தைத்தானே சொன் னேன்? ஒரு வேளை உங்களுக்கு விஷயமே தெரியாதோ ?''

''என்ன நிலவரம்? என்ன நடந்தது?''

''நிஜமாகவே நீங்க ஒண்ணும் கேள் விப்படலையா ? ஸைக்கோ ஸாரநாதன் கொடைக்கானலுக்கு விஜயம் பண்ணி யிருப்பது பற்றி ஊரெல்லாம் ஒரே பர பரப்பா இருக்கே?. மினிஸ்டர் வந்தாக் கூட இத்தனை அமர்க்களப்படாது !''

''ஓ ! அதைச் சொல்றீங்களா ?'' என்றார் பத்மநாபன். கோடைகாலத் தில் சேரியில் பற்றிய நெருப்பு மாதிரி வதந்தி வேகமாகப் பரவுகிறது என்று எண்ணியவராகக் கேட்டார்: ''நீங்கள் அந்த வதந்தியை நம்பறீங்களா? நான் டி. ஐ. ஜி.யையே நேரில் கேட்டேன். அவர் சிரிக்கிறார். ஏதோ அசந்தர்ப்ப மாக ஒருவன் தற்கொலை பண்ணிக்கிட்ட தாலே ஸைக்கோ ஸாரநாதன் கொடைக் கானலுக்கு வந்து விட்டதாக முடிவு கட்டிவிடறதா ? பாமர ஜனங்கள் அப்படிப் பேசிக்கிட்டாலும் பரவா யில்லை. உங்களைப்போல நல்லாப் படிச்ச வங்க......''

''மிஸ்டர் ! ஒருத்தன் செத்துப் போனால் ஒரு வேளை தற்கொலையாக இருக்கும்னு முடிவு கட்டலாம். இங்கே என்னன்னா ஹோட்டல் பொங்கலிலே முந்திரிப் பருப்பைத் தேடி எடுக்கறதை விடச் சுலபமா உடல்களைக் கண்டு பிடிச்சுக்கிட்டே இருக்காங்க. இதோட இரண்டாச்சு. ஒவ்வொண்ணுக்கும், 'தற்கொலை', 'தற்கொலை'ன்னு தபால் காரர் மாதிரி முத்திரை குத்தித் தள்ள றார் உங்க டி. ஐ. ஜி. சுத்த உபயோக மற்ற மனுஷர். இவருக்கெல்லாம் எப் படியோ பெரிய பெரிய பதவி கிடைச்சுப் போவுது.''

''இரண்டு உடல்களைக் கண்டெடுத் திருக்காங்கன்னு சொன்னீங்க? மறுபடி யும் ஒரு மரணமா ?''

''ஆமாம், டி. ஐ. ஜி. அதுக்குத் தான் போயிருக்கார். இன்வெஸ்டி கேஷனும்! இவர் என்னத்தைத் துப்புத் துலக்கி வாழப் போறார்? பாதிப் போது இங்கே உட்கார்ந்து பூரியும் மசாலா கிழங்கும் விழுங்கிக்கிட்டிருக் காரு....''

டி. ஐ. ஜி.க்காகப் பரிந்து பேச வேண்டிய சமயம் அதுவல்ல என்று உணர்ந்த பத்மநாபன், தம் கருத்தை மௌனவுக்கும் குறிப்பால் உணர்த்தினார். அவன் கோபத்துடன் சம்பாஷணையில் குறுக்கிட ஏதாவது ரசாபாசமாகப் போய்விடப் போகிறதே என்ற கவலை அவருக்கு.

''யார் ஸார், செத்துப் போனது?'' என்று கேட்கும்போதே யாராக இருக்

# இரண்டுமே இயக்கத்தில் உன்னதமானவை.









கேமி, சரியான மணி
காட்ட உலகெங்கிலும்

Rutun Batra/CW/Tam/07

---

# அஜாக்ஸ் உப்புத்தாள்

வேலையை துரிதமாக முடிக்கிறது. அதனால் பணச் செலவும், நேரமும், உழைப்பும் குறைகிறது.



- சிறந்த முறையில் தயாரிக்கப்படுவதால் ஒரு சிறு துண்டும் பல நாட்களுக்கு நீடித்து வரும்.
- அஜாக்ஸ் உப்புத்தாளின் மேல்பூச்சு ஒரே சீராய் இருப்பதால் பொருள்களை மழமழப்பாக்குவது வெகு சுலபம்.
- அஜாக்ஸ் உப்புத்தாள் வேலையை துரிதமாக முடிப்பதால் காசும் மிச்சம், வேலையும் மிச்சம்.
- எந்த வேலைக்கும் ஏற்றதோர் அஜாக்ஸ் உப்புத்தாள் உண்டு.




## அஜாக்ஸ்

உப்புத்தாள்கள் தரத்தில் A-I






கார்போரண்டம் யுனிவர்சல் லிமிடெட்,
சென்னை - கல்கத்தா - பம்பாய் - புது டில்லி

பல்வேறு தொழில்களுக்கும் ஆதாரக் கருவிகளை தயாரித்து அளிப்பதையே தன் பணியாகக்கொண்ட ஸ்தாபனம்




கும் என்பதும் பத்மநாபனுக்குப் புரிந்து போயிற்று.

''கொஞ்ச நேரம் முன்னாடி வந்திருந்தீங்கன்னு அந்த சினிமா நட்சத்திரம், 'அம்மா! அம்மா!'ன்னு புலம்பிக்கிட்டே வந்து காரில் ஏறினதை நீங்க பார்த்திருக்கலாம்.''

'' யாரு ? பிரமீளாவின் அம்மா கனகமா காலமானது ?'' பத்மநாபன் குடும்பத்தில் விக நீங்கலாக அனைவரது உள்ளத்திலும் எழுந்த கேள்விக்குக் குடும்பத் தலைவர் ஒலி வடிவம் தந்தார். குடும்ப அங்கத்தினர்கள் அனைவரும், அவர்களையும் அறியாது ஒருவரை ஒருவர் நெருங்கி ஒண்டிக் கொண்டனர். இனந் தெரியாத ஒரு பயம் தற்காப்பு உணர்ச்சியைத் தாண்டி அவர்களை ஒன்று கூட்டியது. '' நான்தான் அப்பவே சொன்னேனே, அம்மா !'' என்றான் அனசூயா.

''பார்த்தீரா ஐயா! உம்ம குழந்தைக்குத் தெரிகிறது. உமக்குத் தெரியலே. குடும்பத்தோடு வந்திருக்கீங்க; எதுக்கு ஆபத்தை விலைக்கு வாங்கணும்? ஊரைப் பார்க்கப் போய்ச் சேருங்க.''

''என்ன ஸார் ஒரேயடியாகப் பயமுறுத்தறீங்களே!'' என்றார் பத்மநாபன். உண்மையில் அவரே கொஞ்சம் கலங்கித்தான் போயிருந்தார். அனுவுக்குப் பிரமை ஏதோ ஏற்பட்டிருக்கிறது என்றல்லவா நினைத்தார்? உண்மையில் பிரமை, 'ஒன்றுமில்லை' என்று தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொண்ட மற்றவர்களுக்குத்தான் என்பது இப்போது வெட்ட வெளிச்சமாகி விட்டதே!

''அரை மணி முன்னாடி நீங்க இங்கே இருந்திருந்தால் இந்நேரம் நீங்களும் என்னைப் போலவே கண்ணில் தென்பட்டவங்களை யெல்லாம் பயமுறுத்திக் கொடைக்கானலை விட்டுக் கிளப்பிக்கிட்டிருப்பீங்க'' என்றார் அந்த நபர். தொடர்ந்து, அவரே கூறினார்: ''எத்தனையோ ஷூட்டிங்குகளிலே இதே மாதிரி 'அம்மா! அம்மா'ன்னு கதறி நடிச்சவள்தான். ஆனா இன்னைக்கு அலறித் துடிச்சாளே அந்த மாதிரி காமிரா முன்னாலே நடிக்க வருதா? நானும் என் ஒய்ஃபும் அந்தக் கண்ணராவியை நேரில் பார்த்தாச்சு; இன்னும் மூணு நாளைக்கு எனக்கு இராத் தூக்கமே கிடையாது!.. அவளாலே காரை ஓட்ட முடியாது என்பதாலே டி. ஐ. ஜி. தம் மகனை உதவிக்கு அனுப்பி வைச்சார். ஹில்டனிலே தங்கி யிருக்காளாமே? அவளும் அவனும் கிளம்பிப் போனதும் இவர் ஃபோன் செய்து தமக்கு ஜீப்பை வரவழைச்சுக்கிட்டாரு. போலீஸ்காரங்க ஈ மாதிரி வந்து மொய்ச்சாங்க. பட்டாளமே வந்து நின்னாத்தான் என்ன? அந்த ஸைக்கோ அத்தனை பேருக்கும் கடுக்காய் கொடுத்திடுவான். ஒன்று இரண்டா, நாற்பத்திரண்டு கொலைகளைச் செய்து கொட்டை போட்டவனாயிற்றே!''

இவ்வாறு கூறிவிட்டுத் தம் மனைவியையும் அருகில் இருத்திக் கொண்டு காரைக் கிளப்பினார் அந்த இரண்டுநாள் நண்பர். கணவனும் மனைவியும் ஸைக்கோ ஸாரநாதனிடமிருந்து தாங்கள் தப்பி ஓடுவதாக மனப்பூர்வமாக நம்புகிறார்கள் என்பதில் பத்மநாபனுக்குத் துளிக்கூட ஐயமிருக்கவில்லை.

சில விநாடிகளில் கார் கண்ணுக்கு மறைந்ததும், ''இது கொடைக்கானல் இல்லே; கொலைக்கானல்!'' என்றான் அம்புஜம்.

''அம்புஜம்! நீயுமா? நீயுமா நம்புகிறாய்?'' என்றார் பத்மநாபன்.

(தொடரும்)

# அழகு சொட்டும் தொட்டுணர்வு

# ஹேஸ்லீன் ஸ்னோ



தலைசிறந்த அழகு
சாதன ஸ்னோவான
ஹேஸ்லீன், உங்கள்
மாந்தளிர் மேனிக்கு
மென்மையப் பராமரிப்பு
வழங்குகிறது.
லேசாகவும் மிருதுவா-
கவும் விளங்கும்
ஹேஸ்லீன் ஸ்னோ,
சீராகப் பரவி, உங்கள்
மேனியைப் பாதுகாத்து,
சருமத்தை நன்கு
பராமரிக்கிறது.
உங்கள் மேனி குற்றங்
குறையின்றி முற்றும்
இளமையுடன் வனப்-
போங்கி விளங்க,
நித்தமும் உபயோகி
யுங்கள் இதை.
இளமையான இயற்கை
எழிலின் இரகசியம்,
ஹேஸ்லீன் ஸ்னோ.




SHB-8295 TM

# ஓர் இடம் சொல்லுங்களேன்!

ப.க.பழைய கருப்பன்

"ஏண்டாப்பா! நீ எத்தனையோ இடங்களுக்குப் போறவன், நாலு பேரோடு பழகுபவன்! எங்க வீட்டுத் திலகத்துக்கு ஒரு நல்ல வரனாகப் பார்த்துச் சொல்லக் கூடாதா டாப்பா!" என்று ஆரம்பித்தாள் காமாட்சி அம்மாள் நீட்டி முழக்கிக் கொண்டு.

முதல் தடவையாக இப்போதுதான் என்னிடம் இந்த விஷயத்தைப் பற்றி பிரஸ்தாபிக்கிறாள் என்று நினைத்து விட வேண்டாம்! இது பத்தாவது தடவையோ பதின்மூன்றாவது தடவையோ நினைவில்லை. ஆனால் முதல் தடவையாக இப்போதுதான் சொல்வதுபோல் ஆரம்பிப்பது அந்த அம்மாளின்சுபாவம்.

பெண் கல்யாணத்தின் முழுப் பொறுப்பையும் காமாட்சி தலையில் சுமத்திவிட்டார், அவள் கணவர். அவர் என்ன செய்வார் பாவம்! பல வருடங்களுக்கு முன்பேயே அவசரப்பட்டுக் காலமாகி விட்டார் அவர்! திலகம் மூத்த பெண். வீட்டுக்கு மூத்த பெண் என்ற வகையில் அவளிடம் பொறுமை நிறைய இருந்தது. சமையல், சங்கீதம் முதலியவற்றில் ஓரளவு திறமையும் இருந்தது. எங்காவது உத்தியோகம் பார்க்க வேண்டும் என்ற சிறுமைப் புத்தி அவளை வந்து அடையாமல் எஸ். எஸ். எல். ஸி.யில் அவள் தொடர்ந்து ஒரு காலத்தில் அடைந்த தோல்வி காப்பாற்றியது.

'ஐந்தாறு மாதங்களுக்கு முன் காமாட்சி அம்மாள் வீட்டில் ஒரு சுவாரசியமான நிகழ்ச்சி நடந்தது.

காலை சுமார் ஒன்பது மணி இருக்கும். கறுப்பாய் ஒடிசலாக ஒட்டக் கிராப் வெட்டிக் கொண்டிருந்த இளைஞன் ஒருவன், அதற்கு மாறாக அமெச்சூர் நாடக ஹீரோ பாணியில் செக்கச் செவேல் என்று சுருள் கிராப் வாலிபன் ஒருவன், "அப்பப்பா என்ன வெய்யில்" "அப்பப்பா! என்ன டிராபிக் நெரிசல்!" "அப்பப்பா! வாழைப் பழம்தான் என்ன விலை!" என்று ஒவ்வொரு தடவை பேச ஆரம்பிக்கும்போதும் ஓர் 'அப்பப்பா' ஆலாபனையுடனே ஆரம்பிக்கும் ஒரு யுவதி. நான்கு பேராக வர வேண்டுமே என்ற சம்பிரதாயத்துக்காகத் துணைக்கு இழுத்து வரப்பட்ட ஒரு பத்து வயது வாண்டுப் பயல் ஒருவன் ஆகிய நான்கு விதப் பேர்வழிகள் அடங்கிய பெண் பார்க்கும் கோஷ்டி "அம்பத்தூரிலிருந்து வருகிறோம்! காமாட்சி அம்மாள் வீடு இது தானே?" என்று வந்து விசாரித்தனர். இந்த நான்கு பேரும் காமாட்சி அம்மாள் வீட்டாரைப் பார்த்ததில்லை. காமாட்சி வீட்டாரும் இந்த நால்வரில் யாரையும் சந்தித்ததில்லை.

"வாருங்கள்! வாருங்கள்!" என்று காமாட்சி அம்மாள் உபசரித்தாள்.

திலகத்தின் தங்கை பாக்கியம் டிபன் பரிமாற ஆரம்பித்தாள்.

"கல்யாணப் பெண் நீதானா?" என்று கேட்டாள் அந்தக் கோஷ்டியின் ஒரே பெண் பிரதிநிதியான யுவதி. நல்ல வேளை "அப்பப்பா!" என்று ஆரம்பிக்கவில்லை. தன்னைப் பிள்ளையின் தந்தைக்கு ஒன்றுவிட்ட தங்கையின் பெண் மிஸ் வஸந்தி என்று அறிமுகப் படுத்திக் கொண்டாள். தன் கூட வந்த மற்றவர்களைப் பற்றி மறந்தே போய்விட்டாள். இதற்குச் சமமாகக் காமாட்சி அம்மாளும் அந்த வீட்டில் தன் அந்தஸ்து பற்றியே சொன்னாள்; மற்றவர்களை அறிமுகப்படுத்த மறந்து விட்டாள்.

டிபன் தட்டை வைத்த பாக்கியம் சட்டென்று நிமிர்ந்து உள்ளே பார்த்து, "இந்தாடியம்மா திலகம்! நீயே வந்து டிபன் கொடு. உன்னைத்தான் பார்க்க வந்திருக்கிறார்கள்; என்னை இல்லை" என்று சொல்லி விட்டு உள்ளே போய் விட்டாள். பாக்கியம் திலகத்தின் தங்கை!

கதவிடுக்கு வழியாக வந்திருப்பவர்களைக் கவனித்துக் கொண்டுதான் நின்றிருந்தாள் திலகம். அடிக்கடி இப்படிப் பெண் பார்க்க அவர்கள் வீட்டுக்குப் புதுப் புதுக் கோஷ்டி வருவது சகஜமாகி விட்டதால் அவள் பிரத்தியேகமாக அலங்கரித்துக் கொள்வதையோ, சமயத்துக்குத் தகுந்தவாறு நாணத்தை முகத்தில் தேக்குவதையோ விட்டு விட்டிருந்தாள். இப்போது வந்திருக்கும் பையன் அடிக்கடி அவள் பார்க்கும் சபா நாடகங்களில் நடிக்கும் கதாநாயகன் மாதிரி இருந்ததில் ஒரு வகைப் பூரிப்பு. இந்த இடம் எப்படியும் அமைய வேண்டும் என்ற பதற்றம் நிறைந்த சபலம். பாக்கியம் கேலியாகக் கூப்பிட்டதைச் சாக்காக வைத்துக்கொண்டு சட்டென்று வெளியே வந்தாள். "நானே



பரிமாறுகிறேன்'' என்று பாத்திரத்தைக் கையில் எடுத்துக் கொண்டாள்.

கேசரியை வாயில் போடப்-போன மிஸ் வசந்தி அப்படியே தன் வலது கையிலிருந்த கடிகாரத்தைக் கவனித்து விட்டாள். ''அட ராஜூ! சேது! அப்பப்பா!... டயம் என்ன ஃபாஸ்டா ஓடறது!... பத்து மணிக்கு எங்க சபாக்காரர்கள் புது சினிமாக் காண்பிக்கறார் களடா! நான் சொன்னது மறந்து போச்சா? மசமசன்னு நிற்காதேயுங்கோ'' என்று தன் கூட வந்தவர்களைப் பார்த்துச் சொல்லி விட்டு, காமாட்சியைப் பார்த்து, ''மாமி! உங்க பொண்ணை ஒரு பாட்டுப் பாடச் சொல் லுங்கோ! டயம் ஆயிடுத்து'' என்றாள்.

திலகம் தொண்டையைக் கமறிக்கொண் டாள். அந்த அழகு வாலிபன் இலேசாகச் சிரித்து, ''முக்கால் மணி நேரம் ராகம் தானம் பல்லவி பாடினால்தான் குரல் இனிமை வெளிப்படும் என்று நாங்கள் நினைக்க மாட் டோம். சும்மா இரண்டு வரி... ஹம் பண்ணி னால்கூடப் போதும்! சம்பிரதாயத்தை விட்டு விட வேண்டாம் என்றுதான்...'' என்று ஆரம்பித்தான்.

''கரெக்ட்! சினிமாப் பாட்டு ஏதாவது லேட்டஸ்ட்! திலகம்! உனக்கு 'தம் மாரோ தம்' பாடமா?...'' வசந்தி பஜ்ஜியை ருசித் துக்கொண்டே சப்புக் கொட்டினாள்.

''தாய்ப் பால் கொடுத்தாள் பராசக்தி'' என்ற பாடலைக் கம்பீரமாக ஆரம்பித்தாள் திலகம். அவளுக்கு நல்ல சாரீரம். சமீப காலமாக இந்தப் பாட்டு அவள் அபிமானப் பாட்டு.

சரியாக நாற்பது செகண்டுகள் ஆவதற்குள் மிஸ் வசந்தி ''ஐயையோ! மத்தியானம் பால் கூப்பனுக்கு அம்மா தவிக்கப் போகிறாள். காலம்பறப் பால் வாங்கிட்டு ரேடியோ அடி யிலேயே வைத்து விட்டேன். அம்மாவுக்கு அகப்படாது!'' என்று ஆரம்பித்தாள். தொடர்ந்து, ''அப்பப்பா! எனக்குத்தான் எத்தனை ஞாபக மறதி'' என்று ஆத்ம விமரிசனம் வேறு செய்து கொண்டாள். இந்தப் பேச்சினால் திலகத்துக்குப் பாட்டின் அடுத்த அடி மறந்து போய் விட்டது. திணறிப் போனாள். நல்லவேளை! பாக்கியம் காப்பி கொண்டு வந்து வைத்து விட்டாள்.

''பேஷ்! நல்ல சாரீரம்! சுகமாக இருக்கு... மேலே தொடர்ந்து பாடலாமே!'' என்றான் அந்த அழகன். கூட வந்த குளோஸ்கிராப், டிபன் சாப்பிடத்தான் வாய் திறந்தான்.

''இதோ பாருங்க! நான் 'வாழிய செந் தமிழ்' பாடறேன்! அப்பப்பா! உங்களோட வந்தால் கடிகாரத்தைக் கழற்றி வைத்துவிட வேண்டும்!... மாமி நாங்க கிளம்பறோம்!





## நடையில் சிறந்தவர் யார்?

வீதிகளில் ஒழுங்கோடு நடந்து செல்பவர் யார்? மனிதர்களா? ஆடு, மாடு, நாய் போன்ற வீட்டு மிருகங்களா? கோழி, வாத்து போன்ற பறவை இனங்களா என்பதைக் கண்டறிவதற்காக அமெரிக்காவில் உள்ள பிராணி நூல் வல்லுநர்கள் சிலர் அண்மையில் ஒரு பரிசோதனை நடத்தினர். அந்தப் பரிசோதனையில் கண்ட முடிவு என்ன தெரியுமா? வாத்துகள்தான் பூரண ஒழுங்கோடு வீதிகளைக் கடந்து செல்லுகின்றன என்பதுதான். ஆதாரம்: நியூஸ்டைம்ஸ்

---

மாமா உங்களுக்குக் கடிதாசி எழுதுவார்! நீங்க அவரைப் போய்ச் சந்திச்சுப் பேசி முடிவு செய்து கொள்ளலாம்! டிபனுக்கு ரொம்ப தாங்க்ஸ்! நாங்க வரட்டுமா?... இலகம்! நான் வரேன் அம்மா!'' என்று சொல்லிக் கொண்டே வாண்டுப் பயலைப் பிடித்து இழுத்துக் கொண்டு வாசலுக்குப் போய்விட்டாள் வஸந்தி. இரண்டு வாலிபர்களும் அவளைப் பின்தொடர்ந்தார்கள்.

அடுத்த ஐந்தாவது நிமிடத்தில் காமாட்சி அம்மாள் வீட்டுக் கூடத்தில் ஒரு சிறு மகாநாடு நடந்தது. இது குடும்ப மகாநாடு. பார்வையாளர்களுக்கு இடமில்லை. மாதங்கள் தோறும் மாவட்டங்கள் தோறும் நடக்கும் அரசியல் மகாநாடுகள் மாதிரி ஒவ்வொரு பெண் பார்க்கும் சம்பவம் முடிந்தவுடன் இந்த மாநாடு நடக்கும்.

''பையன் ரொம்ப லட்சணமாயிருக்கிறான்'' என்று விவாதத்தைத் தொடங்கி வைத்தாள் காமாட்சி அம்மாள்.

''சங்கீதத்திலே கூட ரசனை உண்டுபோலே இருக்கு'' என்று ஆமோதித்தாள் இலகம்.

''தலையை என்ன ஜோரா வாரிக்கொண்டிருந்தார்!'' என்று பெருமூச்சு விட்டாள் பாக்கியம்.

வந்தவர்களுக்கு டாக்சி பிடித்து ஏற்றி அனுப்பிவிட்டு வாசலிலிருந்து அப்போதுதான் உள்ளே வந்தான் காமாட்சி அம்மாளின் மூன்றாவது பையன் மணவாளன். ''வந்தவங்களிலே யார் கல்யாணப் பையன்?'' என்று ஒரு கேள்வியைத் தூக்கிப் போட்டான் அவன். அவனுக்கு இப்படி அடிக்கடி சந்தேகங்கள் வரும்; ஆனால் லேட்டாக வரும்.

''நிச்சயமாக அந்த ஒட்டல் தலைக் கறுப்பன் இல்லை'' என்றான் காமாட்சி அம்மாள்.

''அதுக்காகத்தான் கேட்டேன். ரொம்பச் சந்தோஷம். மாப்பிள்ளைப் பையன் ரொம்ப ஜோராக இருக்கான். இலகத்துக்கு ரொம்பப் பொருத்தம்'' என்று மணவாளனும் அந்தக் கோஷ்டி கானத்தில் கலந்து கொண்டான்.

''அந்தப் பொண்ணுதான் காலில் கஞ்சியைக் கொட்டிக் கொண்டு பறந்தாள். கூடக் கொஞ்ச நேரம் இருந்து பேசறுப் போலே வரமாட்டாளோ?'' என்று பெருமூச்சு விட்டாள் காமாட்சி அம்மாள்.

''நான் நாளைக்கே அம்பத்தூருக்குப் போய்க் கேட்டுவிட்டு வருகிறேன். அவர்களுக்கு நிச்சயமாய் நம் இலகத்தைப் பிடித்திருக்கும்'' என்றான் இரண்டாவது பிள்ளை வரதன்.

அன்று இரவு வரதன் வெளியே போய்விட்டு வீட்டுக்குத் திரும்பும்போது ஒரு சுவாரசியமான செய்தியைக் கொண்டு வந்தான்.

''அம்மா!... காலையிலே நம்ப வீட்டுக்குக் கறுப்பா, குட்டைக் கிராப்புடன் ஒரு பையன் வந்தானே! யார் தெரியுமா?'' என்றான்.

''யாராக இருந்தால் என்னடா? டிபன் கொள்ளைக்குக் கூட்டாக வந்தவன்.''

''அவனுக்கு எவ்வளவு சம்பளம் தெரியுமா?''

''எவ்வளவுடா?''

''எண்ணூற்றி ஐம்பது!''

''அசடு மாதிரி இருக்கிற அற்பங்களுக்கெல்லாம் ஆயிரமும் இரண்டாயிரமும் சம்பளம்!... அம்மாடியோவ்!''

''அவன் யாருன்னு கேக்கலியே?''

''சொல்லித் தொலையேண்டா!''

''அவன்தான் அம்மா அம்பத்தூர்க்காரர் பிள்ளை; கல்யாணப் பிள்ளை!''

''வந்த ராஜபார்ட்?''

''அவன் பெரியப்பா பிள்ளை. அவனுக்கு இரண்டு குழந்தைகள்.''

காமாட்சி அம்மாளுக்குச் சில நிமிஷங்கள் பேச்சே வரவில்லை.

''அம்பத்தூர்க்காரருக்கு ஒரு கடுதாசி எழுதுடா வரதா!''

''என்ன எழுதணும்?''

''அவர்கள் முந்திக்கொள்வதற்கு முன் நாம் முந்திக்கொள்ள வேண்டும். எங்களுக்குப் பிள்ளை இருப்தியில்லை என்று எழுது.''

''அவசியமில்லேம்மா!... அவர்கள் நமக்கு ஒன்றும் எழுத மாட்டார்கள். இன்றைக்கு மத்தியானம் அந்தப் பையனுக்குக் கல்யாணம் நிச்சயமாயிடுத்து. பெண் எம். எஸ்ஸி. நானூறு ரூபாய் சம்பளம். பெண்ணுக்குப் பையனைப் பிடிச்சுப் போயிடுத்து!''

''கண்ணறாவி! இவனுக்கும் கழுத்தை நீட்டறாளே ஒருத்தி! நம்ம இலகம் தப்பினா! அது சரி! இதெல்லாம் உனக்கு எப்படித் தெரியும்?''

''அந்த ராஜபார்ட் பையனைக் கொஞ்ச நேரத்துக்கு முன்னாலே பஸ் ஸ்டாப்பிலே பார்த்தேன்.''

காமாட்சி அம்மாள் அப்புறம் பேச்சைத் தொடரவில்லை.

''எங்கள் இலகத்துக்கு ஒரு நல்ல இடமாக இருந்தால் சொல்லுங்களேன். பையன் நல்ல சிவப்பாகக் களையாக உயரமாக மாதம் எண்ணூறு ரூபாய் சம்பாதிப்பவனாக, பிக்கல் பிடுங்கல் இல்லாமல் நிறையச் சினிமாக்கள் பார்க்க விரும்புபவனாக இருக்க வேண்டும். இலகத்தை விட மூன்று வயதுதான் பெரியவனாக இருக்க வேண்டும்! அதற்கு மேல் கூடாது!

''அடடா! இலகத்தின் வயதைக் கேட்கிறீர்களா?... மூச்! ஒரு பெண்ணின் வயதைச் சொல்லக் கூடாது!... வேண்டாம் சார்! விட்டு விடுங்கள்!... சாரி... காமாட்சி அம்மாளே பார்த்துக் கொள்ளட்டும்!''

# ஃப்ளோரைட் குறைந்தபட்சம் 50 வயது மட்டும் பற்களில் சொத்தை விழாமல் தடுக்கிறது

1961ல் ரஸ்ஸலும் எல்லோவும் நடத்திய
ஆராய்ச்சி. ஆதாரம்: 'ஸைன்டிபிக்
ஆர்ட்டிகிள்ஸ்' பக்கம் 305; இங்கிலாந்து ராயல்
காலேஜ் ஆப் ஸர்ஜன்ஸ் ஆண்டு மலர்,
நவம்பர் 1969. தொகுதி 45/எண் 5

## எனவேதான் பினகா தங்களின் பற்பசையில் ஃப்ளோரைட் சேர்த்துள்ளனர்

(ஏனெனில் பினகா ஃப்ளோரைடில் உள்ள ஸோடியம்-மோனோ-ஃப்ளோரோ-ஃபாஸ்பேட் (SMFP) சொத்தை விழாமல் பற்களைப் பாதுகாப்பதுடன், பல் எனாமலைப் பலப்படுத்துகிறது. பாதகம் செய்யும் அமிலங்கள் வாயில் உருவாவதைத் தடுக்கிறது. பற்களின் அகாலச் சிதைவைத் தவிர்க்கிறது. பினகா ஃப்ளோரைட் உபயோகம் செய்ய முக்கிய காரணங்கள் இவை. நோய் வருவதற்கு முன் காப்பளித்திடும் பற்பசை இவை)






பற்சிதைவு, வலிதரும் சொத்தை
இவைகளுக்கெதிரான மும்முனைப்
பாதுகாப்பு-பினகா ஃப்ளோரைட்

# "அலை ஓசையில் இலக்கிய நயம்"

## அலை ஓசை இலக்கியப் பரிசுத் திட்டம்

போட்டி விதிகளுக்கு உட்பட்டு அலை ஓசையில் தேர்ந்தெடுக்கப்பட்ட வரிகள், அவை இலக்கிய நயம் மிக்கவை என்று கருதுவதற்குக் கூறப்பட்ட காரணம் ஆகிய இரண்டையும் கவனித்துப் பார்த்துக் கீழ்க் கண்டவர்களுக்குப் பரிசு தருவதெனத் தீர்மானித்தோம். — ஆசிரியர்

முதல் பரிசு ரூ. 100

புலவர் வே. அரசு, அதிகாரப்பட்டி, தருமபுரி மாவட்டம்

பரிவுப் பரிசுகள்: (தலா ரூ. 10-00)

1. குமாரி அ. ரஜினி, பி.ஏ., கடலூர்
2. ஸ்ரீமதி ராஜம் பார்த்தசாரதி, புதுதில்லி

**புலவர் வே. அரசு**

*"சாலையின் இரு புறத்திலும் ஆலமரங்கள் சோலையாக வளர்ந்திருந்தன. ஆதியும் அந்தமும் இல்லாத பரம்பொருளைப்போல் அந்தச் சாலை எங்கே ஆரம்பமாகிறது, எங்கே முடிவாகிறது என்று தெரிந்து கொள்ள முடியாததாயிருந்தது. பகவானுடைய விசுவரூபத்தின் அடியும் முடியும் காண முடியாதவாறு போல இரு திசையிலும் அடர்ந்த மரக் கிளைகளினிடையில் அந்தச் சாலை மறைந்தது."*

அலையோசையின் தொடக்கத்தில் வரும் இந்தச் சில வரிகளே நான் விரும்பும் இலக்கிய நயம் உடைய பகுதியாகும். எந்தச் செயலைச் செய்தாலும் முதலில் இறைவனை வணங்கி விட்டுத் தொடங்குவது மரபு. புலவர்களும் கடவுள் வாழ்த்துப் பாடிய பின்னரே நூலைத் தொடங்குவர். அமரர் கல்கி அவர்கள் கடவுளை வணங்கிவிட்டு அலையோசையைத் தொடங்க வேண்டும் என்று எண்ணினாரோ இல்லையோ, அவர் அறியாமலேயே கடவுள் வழிபாடு அலையோசையின் தொடக்கத்தில் அமைந்துவிட்டது.

"ஆதியும் அந்தமும் இல்லாத பரம்பொருளை" என்று அதில் சொல்லப்பட்டிருப்பதை எண்ணிப் பார்க்கும்போது "ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும் சோதியை" என்னும் பாடலடிகள் நினைவுக்கு வருகின்றன. "அந்தச் சாலை எங்கே ஆரம்பமாகிறது, எங்கே முடிவாகிறது" என்ற வரிகள் "பாதாளம் ஏழினும் கீழ் சொற்கழிவு பாதமலர் போதார் புனை முடியும் எல்லாப் பொருள் முடிவே" என்று பாடுவது போலவும், "ஓங்கி உயர்ந்து வளர்ந்துள்ள ஆலமரங்கள்" "ஓங்கி உலகளந்த உத்தமன்" என்று கண்ணனைப் போற்றுவது போலவும் "பகவானுடைய விசுவரூபத்தின் அடியும் முடியும் காண முடியாதவாறுபோல" என்பது "பாதங்கள் இவையென்னில் படிவங்கள் எப்படியோ" என்று வியப்பது போலவும் அமைந்து இலக்கிய வரிகளை நினைவூட்டுகின்றன.

இத்தன்மையான அலையோசையின் தொடக்கமே இலக்கிய நயம் வாய்ந்து என் உள்ளத்தைக் கவர்ந்து, மேலும் படிக்கத் தூண்டுகோலாக அமைந்தது என்று சொல்லிக் கொள்கிறேன்.

**அ. ரஜினி, பி. ஏ.**

கல்லால் செய்யப்பட்ட பனை காலங் காலமெல்லாம் நிலைத்திருப்பது போல் நிலைத்திருப்பது தான் இலக்கியம். அத்தகைய இலக்கியம் அன்றுதொட்டு இன்றுவரை பல்வகையில் சிறந்து விளங்குகிறது. இதற்கு அமரர் கல்கி அவர்கள் எழுதியுள்ள 'அலையோசை'யும் விதிவிலக்கல்லவே? சாதாரண சொற்களிடையே அவருடைய இலக்கிய நயம் புடம் போட்ட பொன் போல் மிளிர்கிறது. அவற்றில் என்னைக் கவர்ந்தவை:

"ஒவ்வொரு பெண் பிள்ளையிடத்தும் தாடகையும் சூர்ப்பனகையும் குடிகொண்டிருக்கிறார்கள். அதே மாதிரி லக்ஷ்மியும் சரஸ்வதியும், சீதையும் அருந்ததியும் இருக்

கிறார்கள். புருஷன் யாரைக் கூப்பிடுகிறானோ, அவர்கள் வெளி வருவார்கள். சூர்ப்பனகையை விரும்பினால் சூர்ப்பனகையும், சீதையை விரும்பினால் சீ தை யு ம் வருவார்கள்'' என்ற இடமேயாகும்.

எவ்வளவு அழகான அர்த்தத்துடன் கூடிய சொற்கள்! ஒரு பெண்ணைப் பற்றி ஒரு பெண்ணே அறிய முடியாத இந்நேரத்தில் கல்கி அவர்கள் எவ்வளவு அழகாக ஒரு பெண்ணைப் பற்றித் தம் கதாபாத்திரம் மூலம் அனைவரும் உணரும்படி செய்துவிட்டார்! பாலகிருஷ்ணனின் மனத்தில் உள்ள பெண்களைப் பற்றிய தவறான அபிப்பிராயத்தை மட்டும் அவர் நீக்கவில்லை. இதனைப் படிக்கும் ஒவ்வொரு வாசகரின் மனத்திலுள்ள தையும் அல்லவா அவர் நீக்கிவிட்டார்!

''பெண்களைப் பலவீனமானவர்கள் என்று அழைப்பது ஒரு குற்றமாகும். இது பெண்ணுக்கு ஆண் இழைக்கும் அநீதியாகும். பலத்தை மிருகத் தனமான பலம் என்று கருதினால் ஆண்களை விடப் பெண்களுக்குப் பலம் குறைவுதான். ஆனால் பலத்தை அறநெறிச் சக்தியாகக் கருதினால் ஆண்களை விடப் பெண்களே மேலானவர்கள்'' என்கிறார் காந்தி. கல்கியின் கூற்று மேற்கூறிய காந்தியின் கூற்றுக்குப் பொருந்துமல்லவா?

**ராஜம் பார்த்தசாரதி**

சீதா......லலிதா. ''அலையோசை''யின் கதாநாயகிகளான இந்த இரு பெண்களையும் கல்கி அவர்கள் நமக்கு அறிமுகப்படுத்தும் விதம் வெகு அருமையானது. ''லலிதா மாநிறமானவள். சீதாவின் மேனியோ வெண்பட்டினை யொத்த சந்தன வர்ணம் கொண்டது'' என்று எடுத்த எடுப்பில் நறுக்குத் தெறித்தாற்போல் தேர்ந்த சைத்திரிகரின் கைவண்ணம் பட்ட சித்திரம்போல் நம் மனக்கண் முன் அவர்களை நிறுத்துகிறார் ஆசிரியர். அவர்கள் அழகை வர்ணிக்கும்போது மேலும் ''லலிதாவின் கண்கள் நீண்டு, சாந்தம் குடி கொண்டு தாமரை இதழின் வடிவை ஒத்திருந்தன. சீதாவின் கண்களோ அகன்று வட்ட வடிவமாய்க் குமுத மலரை யொத்திருந்தன. அவளுடைய கண்ணிமைகளுக்குள்ளே கருவிழிகள் அங்குமிங்கும் சுழன்று சஞ்சல புத்தியைக் காட்டின என்றாலும், பார்ப்பவர்களை உடனே பிரமிக்கச் செய்யும் தன்மை வாய்ந்திருந்தன.... சாமுத்திரிகா இலட்சணம் அறிந்தவர்கள் ஒருவேளை சீதாவை விட லலிதாதான் அழகுடையவள் என்று சொல்லக் கூடும். சீதா பம்பாய்ப் பட்டணத்தின் நாகரிகத்தில் பிறந்து வளர்ந்தவள். லலிதாவோ பட்டிக்காட்டிலேயே இருந்தவள். அதற்குத் தகுந்தபடி அவர்களுடைய நடை உடை பாவனைகள் அமைந்திருந்தன. [சீதாவின் காதுக்கருகில் தொங்கிய சுருட்டை மயிர் ஒன்றே போதும், அவளுடைய முக வசீகரத்தை ஸ்தாபிதம் செய்வதற்கு. அவளுடைய பேசும் திறமையைப் பற்றியோ கேட்க வேண்டியதில்லை. கலகலவென்று வார்த்தைகளைக் கொட்டிக் கொண்டிருப்பாள். லலிதா ஒரு வார்த்தை சொல்லுவதற்குள் சீதா பத்து வார்த்தை சொல்லி விடுவாள். கான்வெண்ட் பள்ளிக்கூடத்தில் படித்தவளாதலால் பேசிக் கொண்டேயிருக்கும்போது திடீரென்று ஓர் இங்கிலீஷ் பாட்டைப் பாடி லலிதாவைத் திகைக்கப் பண்ணி விடுவாள்.''

சீதாவையும் லலிதாவையும் இவ்வளவு தத்ரூபமாக ஆசிரியர் சித்திரித்திருப்பது இன்று இருபது வருடங்களுக்குப் பின் படிக்கும்போதும், புதுமையாகவும் சுவை குன்றாமலும் உள்ளது. அவர்கள் வெறும் கதாநாயகிகளாக அல்லாமல், நாம் நன்றாகப் பழகிய, பாசம் கொண்ட மறக்க முடியாத ஜீவபாத்திரங்களாக நம் உள்ளங்களில் ஒன்றச் செய்துவிடுகிறார் ஆசிரியர். கதாபாத்திரங்களோடு வாசகர்களுக்கு ஏற்படும் இந்த சகஜ மனப்பான்மையைக் கதை நெடுகிலும் காணலாம்.

பெண்களின் புற அழகையும் அக உணர்ச்சிகளையும் நுட்பமாக ஆராய்ந்து எழுத்தில் வடிப்பதில் கல்கி அவர்கள் ஈடு இணையற்றவர். இரு வேறு சாயலும் குண வேறுபாடுகளும் கொண்ட சீதாவையும் லலிதாவையும் நூல் பிடித்தாற்போல் துல்லியமாகவும், தனித் தனி ஆனால் முழுமையான பாத்திரங்களாகவும் படைத்திருக்கிறார். இது போன்ற நயமும் சரளமும் நிறைந்த பல பகுதிகள் இந்தக் கதையில் அங்கொன்ற அடுக்கடுக்காக எழுவதைக் காணலாம்.






# வாக்குரிமை — வயதைக் குறைக்கலாமா?

**(இருபத்தொரு வயதானவர்கள்தான் வாக்குரிமை பெற்றுள்ளனர் இன்று. இவ்வயதினைக் குறைக்க வேண்டும்; பதினெட்டு வயதிலேயே மக்கள் வாக்குரிமை பெற வேண்டும் என்று பலர் அடிக்கடி குரலெழுப்பி வருவதைக் கேட்கிறோம். இப்படிச் செய்யலாமா என்பது குறித்து டாக்டர் எச். வி. ஹாண்டேயின் கருத்துக்களை அளிக்கிறது இக்கட்டுரை.)**

வாக்குரிமை பெறக் குறைந்தபட்ச வயது 21 என்று நிர்ணயிக்கப் பெற்றுள்ளதே. இதனை 18 வயதாகக் குறைப்பது பற்றித் தங்கள் கருத்து என்ன?

வயதைக் குறைப்பதை நான் ஆதரிக்கிறேனா என்றுதானே கேட்கிறீர்கள்? பதினெட்டு வயதிலேயே மக்கள் வாக்குரிமை பெறுவதை நான் முழு மனத்துடன் வரவேற்கிறேன்.

அப்படி வரவேற்கக் காரணம்?

வயதைப் பதினெட்டாகக் குறைத்தால் மாணவ சமுதாயத்தினர் பெரும்பாலோர் வாக்குரிமை பெறுவார்களே? இன்றைய இளந் தலைமுறையினரான மாணவர்களுக்கும் முந்தைய தலைமுறையினைச் சேர்ந்த அவர்களது பெற்றோர், ஆசிரியர் ஆகியோருக்குமிடையே உள்ள இடைவெளி (Generation Gap) இருக்கிறதே, அதனை மறந்து விடுவதற்கில்லை. மாணவர்கள் தங்கள் எதிர்காலத்தை உருவாக்கிக் கொள்ளும் பொறுப்பினை ஏற்கவிழைகிறார்கள். பார்க்கப் போனால் முந்தைய தலைமுறையினரை விடத் தங்களால் இதனை நன்கு செயலாற்ற முடியும் என்று அவர்கள் நம்புகிறார்கள். ஆ ரண்டாவது காரணம், மாணவர்களிடையே இன்று நிலவுகிற அமைதியின்மையும் புரட்சிக் கருத்துக்களும் இதன் பயனாக மறையக் கூடும்.

எப்படி?

வாக்குரிமை வழங்கினால் மாணவர்கள், தங்களுடைய விருப்பு வெறுப்புக்களை ஓட்டுப் பெட்டியின் மூலம் வெளிப்படுத்த வழியேற்படும். இவ்வுரிமையை மாணவர்களுக்கு வழங்க மறுத்தால் அவர்கள் வேறு வழிகளைப் பின்பற்ற ஆரம்பிக்கிறார்கள். அது விரும்பத் தக்கதல்லவே?



டாக்டர் திரு எச். வி. ஹாண்டே

போட்டியிடும் வேட்பாளர்களுள் தகுதியும் திறமையும் மிக்கவரைத் தேர்ந்தெடுக்கும் திறன் அல்லது பக்குவம் அந்த வயதில் அவர்களுக்கு இருக்கும் என்று நினைக்கிறீர்களா?

அவர்களின் தேர்வுத் திறன் எப்படியிருந்தாலும் இன்றுள்ள நிலைமையை விட மோசமாயிராது! இன்று நாம் கண்டு வருகிறோமே, அதைவிடப் பத்து மடங்கு சிறப்புள்ளதாக இருக்கும் மாணவர்களின் முடிவு. லஞ்ச ஊழல் மிகுதியாக உள்ளது என்று நாம் இன்று புகார் செய்து வருகிறோம், கேள்விப்படுகிறோம். மாணவர்களை விலைக்கு வாங்க முடியாது என்பது உறுதி. லஞ்சப் பேய்க்கு அவர்கள் ஒருகாலும் அடிமையாக மாட்டார்கள் என்று அறுதியிட்டுக் கூறுவேன். தவிரவும் இன்றைய மாணவர்களின் அறிவுத் திறன், அதே வயதில் அவர்களுடைய பெற்றோர்களுக்கு இருந்ததை விட மேம்பட்டது என்றே கூறலாம்.

21 வயதுக்குட்பட்டவர்கள் அதாவது இன்று வாக்குரிமை பெறாத சில இளைஞர்கள் வோட்டுப் போடச் சாவடிக்கு வராதவர்களின் வோட்டுக்களைப் போட்டு விடுகிறார்கள் என்று புகார் கூறப்படுகிறது! சுருக்கமாக, 'திருட்டு வோட்டு' போடுகிறார்கள் என்று கூறப்படுகிறது. வயதைப் பதினெட்டாகக் குறைத்தால் நிலைமை மேலும் மோசமாகி விடாதா?

பதினெட்டு வயதானவர்களுக்கு வாக்குரிமை வழங்கினால் அவர்கள் நிச்சயம் வாக்குப் பதிவு செய்ய வந்து விடுவார்கள். வாக்குரிமை உள்ளவர்கள் வாக்களிக்க வராமல் வீட்டிலேயே இருக்கும் இழிநிலையை விட இது எவ்வளவோ மேல். வாழ்க்கையில் வசதியுள்ள பலர், சுயநலம் பேணுவோர் வாக்குச் சாவடிக்கு வருவதில்லை. மாணவர்கள் அப்படியில்லை. அவர்களை நீங்கள் நிச்சயமாக நம்பலாம்.

இது மாணவர்களை அரசியலில் நேரடியாகப் பங்கு கொள்ளத் தூண்டுவதாக ஆகாதா?

கல்லூரிகளில் மாணவர் சங்கங்களுக்குத் தேர்தல் நடக்கிறதே — அதெல்லாம் கட்சி அடிப்படையில்தானே இப்பொழுதெல்லாம் நிகழ்ந்து வருகிறது? அவர்களுக்கு ஒன்றும் தெரியாது என்று நினைப்பதும் சரியல்ல. அவர்களை ஒதுக்கி வைப்பதும் முறையன்று. சிறுவர்களை வளர்க்கும் முறையே இன்று மாறிவிட்டது. அவர்கள் அனைத்தையும் உணரச் செய்வதே

இன்றைய முறை. ஒரு விஷயம் பாருங்களேன் — கிறிஸ்துவக் கல்லூரி உயர்நிலைப் பள்ளி மாணவர்கள் சிலர் சென்ற வாரம் மலேசியாவுக்குச் சுற்றுப் பயணம் சென்றுள்ளனர். நாம் பள்ளி மாணவர்களாயிருந்த காலத்தில் நம் பெற்றோர்கள் நம்மை அயல் நாடுகளுக்கு அனுப்ப இசைந்திருப்பார்களா? அவர்களுக்கு பயம் — நமக்கும் அந்த பயத்தை ஊட்டியிருந்தார்கள். இன்று மாணவப் பருவத்திலேயே அவர்களின் அறிவு விசாலமாகியுள்ளது.



**21 வயது வந்த அனைவருக்கும் கல்வியறிவே இல்லாதவர்கள் உட்பட வாக்குரிமை வழங்கியுள்ளது பற்றித் தங்கள் கருத்து என்ன? கல்வி அறிவு உள்ளவர்களுக்கு மட்டுமே வாக்குரிமை என்று விதி செய்திருந்தால் ஜனநாயகம் சிறப்பாகச் செயல்பட்டிருக்குமா?**

படித்தவர்கள், படிக்காதவர்கள் என்ற பாகுபாடின்றி எல்லாருக்குமே வாக்குரிமை அளித்துள்ளது முற்றிலும் சரியே. இது விஷயத்தில் நேரு செய்த முடிவு மிகவும் பாராட்டுக்குரியதே. படித்தவர்கள் என்று சொல்கிறோமே — அவர்களிடம் வோட்டுக் கேட்க வேட்பாளர் செல்லும்போது, 'நான் ஏற்கனவே இன்னாருக்கு வாக்குறுதி அளித்து விட்டேன்' என்று சொல்லும் 'படித்தவர்களை' தான் கண்டிருக்கிறேன். வோட்டளிப்பது என்பது யாருக்குமே வாக்குறுதி யளிக்க முடியாத விஷயமல்லவா? அதே சமயம் படிக்காதவர்களிடம் போய்க் கேட்கும்போது, 'தக்க நேரத்தில் முடிவு செய்வோம்' என்று கூறினர். இதுதானே முறை? மேலும் படித்த மக்கள் ஒரு முடிவு செய்து விட்டால் அந்த முடிவை எளிதில் மாற்ற இயலாது.

**பணம் வாங்கிக் கொண்டு வோட்டுப் போடுகிறார்களே, அது முறைகேடான செயல் அல்லவா?**

அப்படித் தவறு செய்கிறவர்கள் ஐந்து சதவிகிதமே இருக்கலாம். பெரும்பாலோர் கட்சி அடிப்படையில்தான் ஓட்டுப் போடுகிறார்கள். படிக்காதவர்கள் மிகுதியாக உள்ள கிராமப்புறங்களில் வாழ்வோரிடம் காணப் பெறும் அரசியலுணர்வு நகர மக்களிடையே கூட இல்லை எனலாம். ஒவ்வொரு பிரஜையிடமிருந்தும் உயர்ந்தபட்சம் எவ்வளவு பயன்களை நாடு பெற முடியுமோ, அப்படிப் பெறும் வகையில் நமது கல்வித் திட்டத்தினை மாற்றி அமைக்க வேண்டும்.

**இங்கிலாந்தில 18 வயதானவர்களுக்கெல்லாம் இன்று வாக்குரிமை வழங்கப் பெற்றுள்ளதல்லவா? அதன் விளைவு என்ன?**

அப்படி யொன்றும் குறிப்பிடத்தக்க மாறுதல் நிகழ்ந்து விடவில்லை இங்கிலாந்திலே. பார்க்கப் போனால் வயதை இருபத்தி ஒன்றிலிருந்து பதினெட்டாகக் குறைத்த பிறகு கன்சர்வேடிவ் கட்சி பதவிக்கு வந்துள்ளது.

**நம் நாட்டிலும் 18 வயது வந்தோர் அனைவருக்கும் வாக்குரிமை வழங்கினால் எப்படி இருக்கும் நிலைமை?**

ஓட்டளிப்பதில் நாணயமும் நேர்மையும் இன்றுள்ளதை விட நிச்சயம் வளரத்தான் செய்யும்.

**தேர்தல் விதி முறைகளில் ஏதாகிலும் அபிவிருத்திக்கான யோசனை கூற முடியுமா?**

இன்றுள்ள சட்டப்படி, வேட்பாளர் அளிக்கும் கார் முதலிய வாகன வசதிகளை ஓட்டுச் சாவடிக்குச் செல்ல வாக்காளர்கள் பயன்படுத்தலாகாது. ஆனால், எல்லா அரசியல் கட்சிகளுமே வாக்காளர்களை ஓட்டுச் சாவடிக்கு அழைத்துச் செல்ல வாகன வசதிகளை அளித்து வருகின்றன. தேர்தல் கமிஷன் இது விஷயத்தில் கண்டிப்புடன் நடந்து கொண்டால் நிலைமை சீர்திருந்தும். யாருக்குக் கூடுதலான கார் வசதி இருக்கிறதோ அந்த வேட்பாளரே வெற்றி பெறுவார் என்ற நிலைமைதான் இன்றுள்ளது. இது மாற வேண்டும்.

**வாக்காளர்களுக்கு வோட்டுச் சாவடிக்குச் செல்லுமுன் கட்சி அலுவலகங்கள் சீட்டுக் கொடுக்கின்றனவே, அது குறித்து ஏதாகிலும் கூற விரும்புகிறீர்களா?**

கட்சிச் சின்னத்தை அச்சீட்டுகளில் அச்சிடுவது கூடாது. ஆனால் இதற்கு மாறாகவே நடைமுறையில் அரசியல் கட்சிகள் செயல்பட்டு வருகின்றன. விதிகளுக்கு மாறாகக் கட்சிகள் செயல்படுவதைத் தடுக்கும் விஷயத்தில் தேர்தல் கமிஷன் தீவிரமாகச் செயல்பட வேண்டும்.

பேட்டி: **பாணன்**



## சரியான பதில்!



கோடீசுவரர் ஜேம்ஸ் ராத்ஸைல்ட் சில சமயங்களில் கடுமையாகப் பேசக் கூடியவர். ஒரு சமயம் கிரீமே என்னும் புகழ் பெற்ற வக்கீலை அவர் சந்திக்க நேர்ந்தது. கிரீமே சற்று அங்கஹீனராக இருப்பார். ஆகவே வக்கீலைப் பார்த்ததும் ஜேம்ஸ் ராத்ஸைல்ட் "தாங்கள்தான் புகழ் பெற்ற வக்கீல் கிரீமேயா! தாங்கள் இன்னும் அழகாக இருப்பீர்கள் என்றல்லவா நினைத்தேன்?" என்றார்.

அதற்கு கிரீமே, "தாங்கள்தான் புகழ்பெற்ற கோடீசுவரர் ஜேம்ஸ் ராத்ஸைல்டா!" என்று கேட்டார்.

"ஏன் சந்தேகம், நான்தான்" என்றார் ராத்ஸைல்ட்.

"இல்லை, ஜேம்ஸ் ராத்ஸைல்ட். இன்னும் பண்பாடு உள்ளவர் என்று நான் நினைத்தேன்" என்றார் கிரீமே!

- நாடோடி

# இந்துமதிக்கு ஒரு கடிதம் வந்திருக்கிறது

## அழகிரி விசுவநாதன்

கண்களிலிருந்து வழிந்த இரண்டு சொட்டுக் கண்ணீரை மெல்லத் துடைத்தெறிந்தாள் இந்துமதி என்கிற இந்து. வாழ்க்கையும் அவளை அப்படித்தான் வேண்டாதவளாக, ஒதுக்கப்பட வேண்டியவளாக, மண்ணோடு மண்ணாகக் கலந்துவிட வேண்டியவளாக, தூக்கி எறிந்து விட்டதா?

இந்துவின் நெஞ்சம் குமுறுகிறது.

எவ்வளவு சாதாரணமாக, எவ்வளவு எளிதாக, எவ்வளவு பயங்கரமாக, எவ்வளவு ஆழமாக அந்த நிகழ்ச்சிகளெல்லாம் நடந்து முடிந்து விட்டன!

ஆறு மாத கால இடைவெளி — அதற்குள் அவளுடைய பெரிய, ஆமாம், அவளைப் பொறுத்தவரையில் மிகப் பெரிய வாழ்க்கை பூத்து, மலர்ந்து, வாடிக் கருகிவிட்டதே.

கருகிவிட்டது என்றே சொல்லிவிடலாமா? அதுவே நிச்சயமாகி விட்டதா?

இந்து எண்ணிப் பார்க்கிறாள்.

ஜனவரி மாதம் 26ந் தேதி.

திருநீர்மலையில் திருமணம்.



மத்தளம் கொட்ட, வரிசங்கம் நின்றூத, மாலைகள் இடம் மாற, மங்கல நாண் கழுத்தில் ஏறுகிறது. கைத்தலம் பற்றுகிறான் குமார்.

தாலியைக் குமார் தன் கழுத்தில் முடியும் போது இந்து கடைக்கண்ணால் அவனைக் கவனிக்கிறாள். குமார் விஷமமாகச் சிரிக்கிறான். அந்தச் சிரிப்புக்குப் பொருள் அப்போது விளங்கவில்லையே? எதிர்த்த சுவரில் அவளைப் போல் தொங்கிக் கொண்டிருந்த காலண்டரைப் பார்க்கிறாள் — ஜூலை 26.

சரியாக ஆறு மாதங்கள் ஓடிவிட்டன, இந்துவின் தலையில் ஒரு பெரிய பாறாங்கல்லைத் தூக்கிப் போட்டுவிட்டு. உடைந்த மண்டை ஓடுகள் இனி ஒன்று சேருமா?

"அம்மா!" என்று வாஞ்சையோடு வந்து தலையைக் கோதி விடுகிறார் வேதாசலம்.

"அப்பா!" என்று முகத்தைப் புதைத்துக் கொள்கிறாள் இந்து: "இப்போது என்மேல் காட்டுகிற அன்பில் பத்தில் ஒரு பங்கையாவது என் கல்யாணத்துக்கு முன்னமே காட்டியிருந்தால் என் நிலை இப்படி ஆகியிருக்குமா, அப்பா?"

"நடந்து போன நிகழ்ச்சிகள் எல்லாம் உடைந்து போன கண்ணாடி மாதிரி அம்மா! இனிமேல் ஒன்று சேர்ந்து கைக்கு வருமா? நடக்க வேண்டிய காரியங்களைப் பாரு!" வேதாசலம் மெல்ல நகருகிறார். இந்து பழைய நினைவுகளில் ஈடுபடுகிறாள்....

இந்துவும் ஆங்கிலோ இந்தியப்பெண்மணியான ஹில்டாவும், பிரபல சைக்கிள், கார் டயர் தயாரிக்கும் ஜே அண்ட் ஜே நிறுவனத்தின் அலுவலகத்தில் டைப்பிஸ்டாகப் பணியாற்றிக் கொண்டிருந்தனர். அதோடு இருவருடைய இல்லங்களும் அடுத்த அடுத்த தெருவில் இருந்தன. ஆகையால் இருவரும் நெருங்கிய சிநேகிதிகள் ஆனதில் வியப்பில்லை. இந்துவின் தந்தை வேதாசலமும், ஹில்டாவின் தந்தை கில்பர்ட் மாரிசும் பெண்கள் மூலமாக ஒருவருக்கொருவர் அறிமுகமாயினர்.

இந்துவும் ஹில்டாவும் ஒன்றாகத்தான் ஆபீசுக்குப் போவார்கள், ஒன்றாகத்தான் திரும்பி வருவார்கள். பணிமனையிலும் பக்கத்துக்குப் பக்கத்தில் உட்கார்ந்துதான் வேலை செய்வார்கள். சக அலுவலர்கள் 'இரண்டு நாகரிகங்களின் சந்திப்பு' என்று வேடிக்கையாகக் கேலி செய்வார்கள்.

இவ்வளவு தூரம் இவர்கள் இருவரும் ஒற்றுமையாக இருந்தாலும் கூட, ஒரே ஒரு விஷயத்தில் மட்டும் மகத்தான வேற்றுமை இருந்தது. அந்த மாறுதலும் தினமும் காலையில் தபால்காரர் அலுவலகத்துக்கு வரும் போதுதான் பளிச்சென்று தெரியும்.

அன்றைக்குக் காலையிலும் வழக்கம்போல் தபால் வந்தது. இந்து கடிதங்களைக் கையில் எடுத்துக் கொண்டு வயது முதிர்ந்த தலைமை பியூன் பரமசிவம் இந்து — ஹில்டா உட்கார்ந்திருந்த அறைக்குள் நுழைந்தார். ஹில்டாவைப் பார்த்து நகைச்சுவையாகச் சொன்னார். ''ஹில்டா அம்மாவுக்கு இன்னிக்கு எண்ணி அஞ்சே அஞ்சி கடுதாசிதான் வந்திருக்கு. ரொம்பக் குறைச்சல்தான் இல்லையா இந்து அம்மா!'' இந்துவைப் பார்த்துக் குறும்பாகக் கண்ணைச் சிமிட்டிக் கொண்டே கேட்டார் பரமசிவம்.

ஹில்டா அந்தக் குறும்பை மிகவும் ரசித்தாள். பிறகு பரமசிவம் இந்துவைப் பார்த்துச் சொன்னான்: ''ஏம்மா, உனக்கு என்னா ஒரு நாளாவது ஒரு கடுதாசியாவது வர மாட்டேங்குது? சேச்சே, சுத்த மோசம், நீயேயாவது ஒரு கடுதாசி எழுதி உன் விலாசத்துக்குப் போட்டுக்கயேன்!'' பரமசிவம் அங்கிருந்து நகர்ந்தார்.

ஹில்டா ஒவ்வொரு கடிதமாகத் திறந்து படிக்க ஆரம்பித்தாள். சில வரிகளைப் படித்துச் சிரித்தாள். சிலவற்றைப் படித்து முகத்தைச் சுளித்தாள். சிலவற்றைப் படித்து உதட்டைப் பிதுக்கினாள். சமயத்தில் வெட்கப்படவும் செய்தாள்.

இந்து ஹில்டாவை ஆச்சரியத்தோடு பார்த்துக்கொண்டே உட்கார்ந்திருந்தாள். யார் தான் எழுதியிருப்பார்கள்? என்னதான் அதில் எழுதியிருக்கும்? ஹில்டாவைக் கேட்டால் தான் என்ன?

இந்து மூக்கில் முனகிக் கேட்டாள்.

ஹில்டா தெளிவான குரலில் சொன்னாள்: ''பூ. இதுக்குத்தானா இப்படிப் பயந்துகிட்டே கேட்டே? நான் என்னமோ ஏதோன்னு நினைச்சுட்டேன். எல்லாக் கடுதாசிகளையும் என் 'பாய்—ஃபிரண்ட்ஸ்' தான் எழுதியிருக்காங்க....இதோ இந்த 'இன்லண்ட்' கவரை எழுதியிருக்காரே, இவர் பெயர் ரிச்சர்ட்சன். பக்கத்து மில்லிலே சூப்பர்வைசரா யிருக்காரு. பார்ப்பதற்கு ரொம்ப அழகா இருப்பாரு. நல்லா உயரமா அளவான பருமனோட, சுருள் சுருளான கிராப்பு... பேச்சும் குணமும் ரொம்பவும் இனிமையானது... இதோ இந்தக் கவரை ஓர் அப்பாவி எழுதியிருக்கு. இன்னைக்கே, இப்பவே 'இதை' நான் கல்யாணம் செஞ்சுக்கணுமாம்... இதோ இந்தக் கடிதம்.... ஆலன் கிரான்ஸ்டன் எழுதியிருக்கார். நல்லவர்தான். ஆனால் மோசமான சில கெட்ட பழக்கங்கள் எல்லாம் உண்டு. இவருக்கு நான் பதிலே எழுதப் போறதில்லே!...என் 'ஸ்வீட்'



றிச்சர்ட்சனுக்குத்தான் நான் 'டேட்' (date) கொடுக்கப் போறேன்.''

ஹில்டாவின் பேச்சைக் கேட்ட இந்து மூக்கின் மேல் விரலை வைத்தாள். பார்த்தால் பசுபோல் இருக்கும் ஹில்டா எப்படியெல்லாம் பேசுகிறாள்! என்னவெல்லாம் செய்து கொண்டிருக்கிறாள்! 'பாய் ஃபிரெண்ட்சாம்' 'டேட்டாம்'!....

ஹில்டா அந்தக் கடிதங்களையெல்லாம் எடுத்துத் தன் சின்ன அலங்காரப் பையில் வைத்துக் கொண்டாள். அதைப் பார்த்த இந்துவுக்கு இன்னும் விந்தை மேலிட்டது.

ஹில்டாவினுடைய தோளை மெல்ல வருடியவாறு இந்து கேட்டாள்: ''கேட்கிறேனே என்று கோவிச்சுக்காதே. இந்தக் கடிதங்களையெல்லாம் வீட்டுக்குக் கொண்டு போகிறாயே, இதையெல்லாம் உன் அப்பா, அம்மா பார்த்தால் ஒன்றும் சொல்ல மாட்டார்களா?''

ஹில்டா அலட்சியமாகச் சிரித்தவாறு பதில் சொன்னாள்: ''ரொம்ப ஒண்ணும் சொல்ல மாட்டாங்க. ஒண்ணே ஒண்ணு தான் சொல்லுவாங்க. அதாவது 'கவனமாக இரு' என்று மட்டும் சொல்லுவாங்க... இந்து என் கண்ணே, நான் சொல்றேன், கேளு. நம்ம யார் கூட வேணுமானாலும் பழகலாம். ஆனால் நடுவே ஓர் எல்லைக் கோடு வெச்சிக்கணும். அதுதான் 'லிமிட்' — வரையறை. அதுக்கு மேலே யாராவது பழக முயன்றால் அவங்களோட அப்புறம் பேசக் கூடாது. அவ்வளவுதான்'' என்று விளக்கம் கொடுத்த ஹில்டா பலமாகச் சிரித்தாள்.

இந்துவுக்கு அடிக்கடி அவளுடைய சக அலுவலர்கள் சொல்லும் 'இரண்டு நாகரிகங்களின் சந்திப்பு' என்ற பதத்தின் பொருள் அப்போதுதான் முழுமையாக விளங்கியது.

அன்று இரவு முழுவதும் இந்துவுக்கு உறக்கமே பிடிக்கவில்லை. கண்களை மூடினால் கண்களைத் திறந்தால், ஹில்டாவும் அவளுக்கு வந்த கடிதங்களுமே முன்வந்து நின்றன. இப்படியா அப்படியா என்று ஒரு தெளிவான முடிவுக்கு வர முடியாமல் இருந்தவளை ஒரு பக்கமாகத் தள்ளிவிட்டு விட்டாள் ஹில்டா.

அடுத்த நாள் பஸ்ஸுக்காக நின்றுகொண்டிருந்தபோதுதான் இந்து, குமாரைக் கவனித்தாள். குமார் அருகில் இருந்த தொழிற்சாலை ஒன்றில் பாதுகாப்பு அதிகாரியாக இருந்தான். நாகர்கோயில் துணைத் தொழிற்சாலையிலிருந்து மாற்றலாகி அப்போதுதான் சென்னைத் தலைமையகத்துக்கு வந்திருந்தான். வாட்டசாட்டமான வலுவான உடலமைப்பு. அதற்கு நேர்மாறாக எளிமையாகப் பேசும் தன்மை. பேச்சில் தென்படும் அறிவின் திண்மை. தொழிற்சாலையையே பாதுகாக்கும் அவர் இந்து ஒருத்தியைப் பாதுகாக்க மாட்டாரா என்ற எண்ணம் எல்லாமாகச் சேர்ந்து, இந்துவின் மனம் குமாரை நாடும்படி செய்தன. அன்றைக்குக் காலையில் ஹில்டாவும், இந்துவும் அலுவலகத்துக்குச் சென்றார்கள்.

காலை நேரத்தில் வழக்கம்போல் தபால் வந்தது. பியூன் பரமசிவம் கத்திக்கொண்டே வந்தான். ''ஆகா, என் பொண்ணு இந்துவுக்கும் ஒரு கடிதம் வந்திருக்கிறது!''

இந்துவுக்கு முகமெல்லாம் சிவந்து என்னவோபோல் ஆகி விட்டது. ''ஆ, பரமசிவம் சும்மா இரு'' என்று அதட்டினாள்.

இந்து எதிர்பார்த்தது போல் குமார்தான் கடிதம் எழுதியிருந்தான். ஹில்டா இந்துவைப் பரிகாசம் செய்தாள். ''யாருடி இந்தத் திடீர் ரோமியோ? பெயரென்ன, எந்த ஊர், என்ன தொழில், என்ன படிப்பு, பெற்றோர்கள் யார், சொத்து பத்து, குணம் எப்படி?''

''அம்மா ஹில்டா பாட்டி! அதெல்லாம் அடுக்கடுக்காக் கேட்காதீங்க. எனக்குத் தெரியாது. பெயர், ஊர், தொழில் தெரியும். அவ்வளவுதான்.''

''ஓகோ, பஸ் நிலையத்தில் கண்டதும் காதலா? கல்யாணம் எப்போது?''

''உனக்குச் சொல்லாமலா?'' என்று ஹில்டாவின் கன்னத்தில் செல்லமாகத் தட்டினாள் இந்து.

''அது சரிடி, இந்து! உன்னுடைய காரியத்திலேயே இருந்துட்டியே, இந்தக் கதையைக் கேட்டியா? நேற்று என் 'பாய் ஃபிரண்ட்' டிசௌஸாவை என்னுடைய வீட்டுக்கு அழைத்துக் கொண்டு போனேன். என் தந்தையை அறிமுகப்படுத்தி வைப்பதற்குள் வந்த டிசௌஸா ஓட ஆரம்பிச்சுட்டாரு. அவர் முன்னமே திருமணம் ஆனவராம். அப்பாவுக்குத் தெரியுமாம். எப்படிடி காரியம்? தப்பிச்சேண்டி!''

இந்து கேட்டாள்: ''அப்பஎன்னு ஹில்டா உன் 'பாய் ப்ரண்ட்'ஸை யெல்லாம் உன் வீட்டுக்கு அழைச்சிக்கிட்டுப் போவியா?''

''ஓ, தாராளமாக. 'பாய் பிரண்ட்ஸ்' என்றால் என்னடி, 'கேர்ல் பிரண்ட்ஸ்' மாதிரி தானே? என் வீட்டுக்கு வருவாங்க. என் பெற்றோர்களுடன் பேசிக்கிட்டு இருப்பாங்க. இதெல்லாம் மாடி மேலே போறதுக்குப் படிக்கட்டுங்க மாதிரி. ஒவ்வொரு படியா ஏறிப் போகாமல் ஒரே தடவையா தாண்டினால், மாடிக்கும் போக மாட்டோம். கீழே விழுந்து பல்லு, மூக்கு, முகமெல்லாமும் உடைஞ்சு போயிடும்!''

''நீ சொல்ற உதாரணம் ரொம்பவும் மனத்துக்கு இதமாக இருக்குது, ஹில்டா!'' என்றாள் இந்து.

''அப்புறம் என்னாச்சுன்னு கேளு. முன்னமே கல்யாணம் செய்துக்கிட்டு என்கிட்டே காதல் செய்ய வந்தாரில்ல, டிசௌஸா, அவரை இனிமேல் என் வழிக்கு வரக் கூடாது என்று சொல்லி விட்டேன்... என் தந்தையும் கண்டிச்சிட்டாரு!''

அதைக் கேட்ட இந்து எப்படியும் குமாரை வேதாசலத்துக்கு அறிமுகப்படுத்தி வைக்க வேண்டும் என்று எண்ணிக் கொண்டாள். அன்று இரவே இந்து தன் தாயாரின் மூலமாக விஷயத்தைத் தந்தையின் காதில் போட்டு வைத்தாள். இதைக் கேட்ட வேதாசலம் சத்தம் போடுவது நன்றாக இந்துவின் காதில் விழுந்தது. ''எனக்கு முன்னமே தெரியுமே, எப்ப வீட்டைவிட்டு வெளியிலே வேலைக்குன்னு அனுப்பினேனோ, இப்படித்தான் வந்து ஒரு நாளைக்கு நிப்பான்னு... குமார், 'கிமார்'னு ஒரு பயல் என் வீட்டு வாசலை வந்து மிதிக்கக் கூடாது. காலை வெட்டிக் கழுகுக்குப்



# "ஆம். இவை சீதையின் காற்சலங்கைதான்" என்றான் லக்ஷ்மணன்

சீதையின் காற்சலங்கையை எளிதில் இனம் கண்டு கொண்டான் லக்ஷ்மணன். அவ்வளவு தனித்தன்மை வாய்ந்தவை அவை. காற்சலங்கைகள் மட்டுமல்ல. இந்திய கைவினைத் தொழில் நிபுணர்கள் கலையுணர்வுடன் தயாரிக்கும் வளையல்கள், காதணிகள், ஒட்டியாணங்கள், ராக்கடி, திருகு... அனைத்திலும் தனி அழகும், கவர்ச்சியும் உண்டு. காலத்துக்கேற்றபடி இந்திய கைவினைப் பொருள்களும் மாறிக்கொண்டே வருகின்றன. புராதனப் பொலிவும், புதுமையின் கவர்ச்சியும், அழகும், பயனும் இணைந்தவை இந்திய கைவினைப் பொருள்கள்.

எழிலான
வாழ்க்கைக்கு
இந்திய கைவினைப்
பொருள்களை
வாங்குங்கள்

davp 71/193

மனதிற்குகந்த
தூய வெண்மையைப் பெற

# ஓ ஓ பி நீலம்

ஓ ஓ பி நீலம் உடனடியாக முற்றிலும் கரைந்துவிடும் வெள்ளைத் துணிகள் ஒரே சீராக பால்போல் பளிச்சிடுகின்றன. உங்கள் சட்டைகள், புடவைகள், பெட்ஷீட்டுகள் மற்ற துணிகள் எதையும் வெள்ளை வெளேர் என்று ஆக்க மிகவும் சிக்கனமான வழி இது. நீலப்புள்ளி விழாது, மஞ்சள் திட்டு தெரியாது.

ஓ ஓ பி நீலம் மேற்கு ஜெர்மன் கூட்டுறவுத் தயாரிப்பு இந்தியாவின் மிக நவீன அல்டிராமரைன் தொழிற்சாலையில் உருவானது

தயாரிப்பாளர்:
அல்டிராமரைன் & பிக்மென்ட்ஸ் லிமிடெட், அம்பத்தூர் சென்னை 53






UPL/6546.

போட்டுடுவேன். இன்னிக்குத் திங்கட்கிழமை. அடுத்த எட்டாம் நாள் திங்கட் கிழமை இந்துவுக்குக் கல்யாணம்! நொண்டியோ நொடமோ, கிழமோ கட்டையோ, நான் பார்க்கிறவன்தான் மாப்பிள்ளே!...ஏய், விசாலாட்சி! அந்தத் துண்டை எடு!'' மாப்பிள்ளே பார்க்க வெளியே போனார் வேதாசலம்.

என்ன பேசி, எப்படிச் சமாதானப்படுத்துவது என்று தெரியாத விசாலாட்சி துண்டை எடுத்துக் கொண்டு வந்து வேதாசலத்திடம் கொடுத்தாள். அவளுடைய கண்கள் பனித்திருந்தன. ஒரு பக்கம் பிடிவாத குணமுள்ள கணவன், மறுபக்கம் காதல் வயப்பட்ட மகள், என்ன செய்வாள், நடுவில், ஒரு பெண்ணைப் பிறந்த விசாலாட்சி?

அழுத கண்களுடன் அறைக்குள் இருந்து வெளியே வந்த இந்து, தந்தையின் கால்களைப் பிடித்துக் கொண்டு கதறினள்: ''ஒரு முறை அப்பா, ஒரே ஒருமுறை அப்பா, என்னுடைய குமாரைப் பாருங்கள், அப்பா! அவரோடு கொஞ்ச நேரம் பேசுங்கள் அப்பா! அவருடைய அந்த இனிய சுபாவம், அடக்கமான பண்பு, மற்ற குண நலன்கள் உங்களுக்குப் பிடிக்கவில்லே என்ருல், நான் நீங்கள் காட்டும் முடவனுக்கே வாழ்க்கைப் படுகிறேன்..... ஆனல், நீங்கள் மட்டும் ஒரு முறை குமாரைப் பார்த்து விட்டீர்களானல், இந்தத் திருமணத்துக்கு மறுக்கவே மாட்டீர்கள், அப்பா! அவரைப் பார்த்துவிட்டு நீங்கள் சொல்லுங்கள், 'இவன் உனக்குத் தகுந்தவன் அல்ல' என்று. சத்தியமாக, என் பெற்றேர்கள் மேல் ஆணை. கட்டுப்படுகிறேன்!''

உரத்த குரலில் வேதாசலம் சொன்னர்: ''அந்தக் காலிப்பயலேப் பார்த்துவிட்டு என்ன சொல்வது? இப்போதே சொல்றேன், உன் மனத்தை மாத்திக்க. இந்தக் கல்யாணம் நடக்காது!''

இந்துவுக்கும் தன் தந்தையின் பிடிவாத குணம் தெரியும். அவராக ஒரு வரன் பார்த்து முடிப்பதற்குள் குமாருடன் கலந்தாலோசித்து ஒரு முடிவுக்கு வந்தாள்; திருநீர்மலேக்குச் சென்று பெற்றேர்களுக்குத் தெரியாமல் திருமணம் செய்து கொண்டு வந்துவிடுவது என்று.

கல்யாணம் முடிந்த கையோடு வேதாசலத்தின் வாழ்த்துக்களேயோ அல்லது வசவுகளேயோ பெறுவதற்கு இருவரும் வந்தார்கள்.

---

வேதாசலம் குமாரைப் பார்த்தவுடன் அதிர்ந்து போனர். ''அடப் பாவி! நீயா!'' என்று கூவினர். அவருடைய நண்பர் நாகர்கோவிலேச் சேர்ந்த ராமசாமியின் கல்யாணம் ஆன மகன் குமார் அல்லவா இவன்? இவனுடைய கல்யாணத்துக்கு நாகர்கோவிலுக்குச் சில மாதங்களுக்கு முன்புதான் வேதாசலம் சென்று வந்தார். முதல் மனைவி இருக்கும் போதே இரண்டாவது கல்யாணம், இந்துவை ஏமாற்றிச் செய்து கொண்டு விட்டானு?

குமார் தேள் கொட்டிய திருடனைப் போல் விழித்தான்.

இந்து தாலியைப் பிடித்துக் கொண்டு கதறினள். ''அப்பா! உங்களை ஒரு முறை பார்க்கச் சொன்னேனே, அப்பா, பிடிவாதமாக மறுத்து விட்டீர்களே, அப்பா! என்ன



சென்னை நந்தனம் பகுதியில் இளஞ் சிறுவர்களுக்குக் கல்வித் தொண்டாற்றி வரும் பாரத வித்தியாலயத்தின் கலைப் பகுதி கலாசமர்ப்பண. பொருத்தமான பெயர். பரதக் கலைக்குத் தம்மை அர்ப்பணம் செய்து கொண்ட தம்பதிகள் நடத்தும் கலைக்கூடம் இது. சங்கீத சிரோமணி எம். வி. நரசிம்மாச்சாரியார். குச்சிப்புடி நடனங்களின் அழகில் தம்மையே மறந்தவர். பாட்டுடன் நட்டுவாங்கம் செய்வதிலும் நிபுணர். நல்ல ரசிகர். அதனல், அவரே குச்சிப்புடி நடனங்களுக்கும், பரதநாட்டிய வகுப்புகளுக்கும் ஆசாரிய ஸ்தானத்தில் இருந்து கொண்டு, போட்டி நிகழ்ச்சிகளில் மேடை நிகழ்ச்சிகளில் பதங்களும் பாடி, நட்டுவாங்கமும் தாமே செய்கிருர். தமது கற்பனை திறனுக்கும் மனேதர்மத்துக்கும் தக்கபடி நிருத்திய வகைகளில் நடை பேதங்களேயும் தாள பேதங்களேயும் புகுத்தி நடனங்களை ரஞ்சகமாகவும் அழகுடனும் விளங்கும் வண்ணம் அமைத்துக் கொண்டிருக்கிருர். அவருடைய மனேதர்மத்துக்கு முற்றிலும் இணைந்து ஒன்றி, ஆடல்களைப் பூரண அழகுடன் வழங்கக் கூடிய அபூர்வ ஆற்றலைப் பெற்றுள்ள அவரது மனைவி ஸ்ரீமதி எம். வசந்தலக்ஷ்மி கலா சமர்ப்பண வீணே செயலாளர் மட்டுமின்றி அதன் நாட்டிய ஆசிரியையும் பிரதான நாட்டிய மணியும் ஆவார். சமீபத்தில் பாரத வித்தியாலயத்தின் ஆண்டுவிழா நிகழ்ச்சியிலும், பின்னர் தியாகராயநகர் ஆர்ட்ஸ் அகாடமி மேடையிலும் நிகழ்ந்த ஸ்ரீமதி வசந்த லக்ஷ்மியின் குச்சிப்புடி பரதநாட்டிய நிகழ்ச்சிகள் அவருடைய கலை முதிர்ச்சியை வழுவின்றி முழுமையாகக் காட்டின. சென்னை மாநகரில் ஆந்திர நாட்டு அழகுக் கலே நன்கு பரவச் செய்யும் பணியில் கலாசமர்ப்பணவின் தொண்டு பாராட்டுக்குரியது.

---

செய்வேன் இப்போது? என் வாழ்க்கையே வீணுகி விட்டதே!....''

நடந்து முடிந்த நினைவுகளில் இருந்து மீண்டாள் இந்து.

வேதாசலம் இந்துவிடம் கனிவோடு சொன்னர்: ''நான் ஒரு முறை நீ சொன்னபடி பார்த்திருக்கலாம். பார்த்திருந்தால் இந்தத் திருமணம் நடைபெருமல் தடுத்திருக்கக் கூடும். முடியவில்லே. சரி, இப்பொழுதுதான் என்ன, குமார் உன்னை வேண்டாம் என்று

சொல்லி விட்டான்...? ஒரு முகத்துக்கு இரண்டு கண்கள் மாதிரி அவளோட வாழ முயற்சி செய்து பாரம்மா!''

இந்து தாழ்ந்த குரலில் சொன்னாள்: ''அவருடைய ஏமாற்றும் தன்மையும், பொய்ம்மையும் எனக்குப் பிடிக்கவில்லை. நாகர்கோவிலில் இருக்கிற என் அக்காவே அவரோடு இருந்து விட்டுப் போகட்டும். நான் தனி மரமாகவே இருந்துவிட்டுப் போகிறேன்... அவசரப்பட்டேன், அனுபவிக்கிறேன்!''

என்றோ ஒரு நாள் அவளிடம் ஹில்டா சொன்ன வார்த்தைகள் நினைவுக்கு வந்தன. ''....இதெல்லாம் மாடி மேலே போறதுக்குப் படிக்கட்டுங்க மாதிரி. ஒவ்வொரு படியா ஏறிப் போகாமல் ஒரே தடவையாத் தாண்டினால் மாடிக்கும் போக மாட்டோம், கீழே விழுந்து, பல்லு, மூக்கு, முகமெல்லாமும் உடைஞ்சு போயிடும்.'

எவ்வளவு உண்மையான சொற்கள்! ஒன்று மாடி மேல் போக வேண்டும் என்று ஆசைப்படக் கூடாது. அப்படியே ஆசைப்பட்டு விட்டால் படிகளின் வழியே போக வேண்டும். இல்லாவிட்டால்? ஒரு பெண் ஓர் ஆணிடம் சாதாரணமாகப் பேசிக் கொண்டிருந்தாலே தவறாக நினைக்கும் இவர்கள் மத்தியிலே நான் செய்ததுதான் தவறா? — இந்து என்னென்னவோ எண்ணி அலமந்தாள்.

அப்போதுதான் ஹில்டா தனக்கும் ரிச்சர்ட்சனுக்கும் நடக்கப் போகும் கல்யாணப் பத்திரிகையுடன் மாடிப் படிகள் ஏறி வந்தாள்.

# படித்துப்பாருங்கள்

## இதோ தமிழ் இதழ்கள் (1970)

தமிழில் தரமான இலக்கியம் படைக்கப்பட்டாலும், அவை பற்றிய மதிப்பீடு வெகு அரிதாகவே நிகழ்ந்து வந்துள்ளது. 'இலட்சக் கணக்கில் விற்கும் எத்தனை பத்திரிகைகள், கதை, கட்டுரைகள் என்று கொடுத்து நேயர்களின் பொழுதைப் போக்க வைக்கின்றன? அவை என்ன என்ன தந்துள்ளன, சமுதாயத்துக்கு அவற்றால் என்ன பயன்?' என்பதை யாவது ஆராய்ந்து பார்த்திருக்கிறார்களா? படித்துப் போட்டுவிடும் பணியைத்தானே பெரும்பாலோர் செய்திருக்கிறார்கள்! இப்படி நினைக்கும் வேளையிலே இலயோலாக் கல்லூரி வீரமா முனிவர் தமிழ் ஆய்வுக் கழகம், யாரும் செய்யாத அருமையான பணியைச் செய்திருக்கிறது. அந்தப் பணியும் எப்படி? ஆசிரியர் — மாணவர் சேர்ந்து செய்துள்ள பணி. மாணவர்களைக் கொண்டே இலக்கியத்தின் தரத்தைக் காண முயன்றிருப்பது பாராட்டுதற்குரியது. இளைஞர்களின் மனம் பண்பட உதவுவதோடு, அவர்கள் எத்தகைய இலக்கியத்தை விரும்புகிறார்கள் என்பதையும் புரிந்து கொள்ள முடிகிறது.

தமிழ் நாட்டில் புகழோடு வெளியாகும் பத்திரிகைகளில் கல்கி, ஆனந்தவிகடன், குமுதம், தினமணி கதிர், கலைமகள், மஞ்சரி, தீபம், துக்ளக், கல்கண்டு போன்ற பத்திரிகைகள் இவர்களுடைய ஆய்வுக்கு உட்பட்டுள்ளன. கதைகளை, கட்டுரைகளை, கவிதைகளை, அவை கொண்டுள்ள கருத்துக் கேற்பப் பிரித்து அலசியுள்ளார்கள். சுய விமரிசனத்தைக் குறைத்துக் கொண்டு எல்லாவற்றையும் விண்டு வைத்து வாசகர்களையே ஒரு முடிவுக்கு வரும்படி செய்திருப்பது அருமையான முயற்சி. அதோடு முடிவுக்கு வரக் கோடி காட்டிக் கொண்டு செல்வது வெகு அழகாக அமைந்திருக்கிறது.

'இதோ தமிழில் புது முயற்சி!' என்று பாராட்டும் அளவுக்கு, 'இதோ தமிழ் இதழ்கள்' அமைந்துள்ளது!

வெளியிடுவோர்: வீரமா முனிவர் தமிழ் ஆய்வுக் கழகம், இலயோலாக் கல்லூரி, சென்னை—34; விலை: ரூ. 4.00.

## அருணாசல மகிமை (பாகம்-1)

விட்ட குறையோ, தொட்ட குறையோ என்பார்கள். ஸ்ரீ பரணீதரன் அவர்கள் ஸ்ரீ சேஷாத்திரி ஸ்வாமிகள் அதிஷ்டானத்தைக் கண்டு, அவரது வாழ்க்கை வரலாற்றைச் சுருக்கமாக எழுதுவதாக இருந்தவர் — பல பாகங்கள் அடங்கிய பெருநூலே எழுதியுள்ளது அவ்வகையைச் சேர்ந்ததே. நமது பாரத நாடு மாபெரும் தவச் செல்வர்கள் நிறைந்த நாடு. அடிக்கொரு பிரயாகை மன்னன் — அதாவது புனித திரிவேணி சங்கமம் — இருப்பதாக வடக்கே ஒரு பழமொழி உண்டு. பக்திக்கு அடிகோலிய நாடு என்று புவியிலே பாரதத்துக்குத் தனிச் சிறப்புண்டு. அதிலும் பலப் பல மகான்கள் வாழ்ந்து காட்டியது தென்னாடுதான் என்பதை நிரூபிக்கிறது அருணாசல மகிமை என்னும் இந்த நூல்.

பிறைசூடிய பெருமானுக்கே பித்தன் என்று பெயர் உண்டு. அவன் அடியார்களும் அவன் வழியையே பின்பற்றியவர்கள்! புற உலகத்துக்குப் பித்தன் போலத் தோன்றினும் அக உலகில், பரமானந்தத்தில் மூழ்கித் திளைத்தவர்கள்.

எல்லோரையும் போல் சர்வசாதாரணமாக நடமாடிய பல பெரியார்கள் ஆண்டவன் அருள் பெற்று அவனாகவே ஆன கதையை ஸ்ரீ பரணீதரன் அவர்கள் அருமையான புதினம் போலச் சித்திரித்துள்ளார். ஆண்டவன் சொரூபம் எப்படி எல்லோருக்கும் விளங்காததோ, அப்படியே அவன் அடியார்களின் வாழ்வும் சர்வ சாதாரண மக்களுக்குப் புலனாகாதது. ஆனால் அவர்கள் பெருக்கிய அருட்செல்வமோ என்றுமே வற்றாதது; அள்ள அள்ளக் குறையாதது. ஆன்மத் தூய்மை பற்றி ஆன்மத் தூய்மையோடு எழுதப்பட்டது இந்த நூல்.

வெளியிட்டோர்: ஆனந்தவிகடன், 151, அண்ணா சாலை, சென்னை—2; விலை: ரூ. 2.50.

# ராக்ஃபோர்ட் பொருளாதார அமைப்பை வலுப்படுத்துகிறது



நமது கிராமங்களில் பொருளாதாரப் புரட்சி நிகழ்ந்துவருகிறது. நீர்ப்பாசன அமைப்புக்களின் பயனாக மேலும் செழுமையான பயிர்கள் நாட்டுப்புறங்கள் முழுவதிலும் புதுச் செல்வத்தைப் பரப்பிவருகின்றன. மண் குடிசைகள் இருந்த இடங்களில் செங்கல் கட்டடங்கள் தோன்றிவருகின்றன. நமது விவசாயச் செல்வத்தைப் பத்திரமாகப் போற்றிக்காக்க அங்கங்கே கிடங்குகள் தோன்றிவருகின்றன.

இந்த முன்னேற்றப் பாதையின் ஒவ்வொரு அடியிலும், பொருளாதாரத்திற்குத் திண்மையையும், வலுவையும் தந்து, புரட்சிக்குப் புத்தூக்கம் அளிக்கிறது ராக்ஃபோர்ட்.





## ராக்ஃபோர்ட்

டால்மியா சிமெண்ட்







**டால்மியா சிமெண்ட் (பாரத்) லிட்.,**
பதிவுபெற்ற அலுவலகம் மற்றும் ஆலை :
டால்மியாபுரம், தமிழ் நாடு.
தலைமை அலுவலகம்: சிந்தியா ஹவுஸ், புது டெல்லி-1.
ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள் :
சிமெண்ட் டிஸ்ட்ரிப்யூட்டர்ஸ் லிட்.,
டால்மியாபுரம், தமிழ் நாடு.

# அம்மா

ரா. கணபதி

## 35. லோகமாதாவை மயக்க யோகமாயா!

தேவி பகவதியான அந்த மகாமாயை ஞானிகளின் சித்தத்தையும் வலுவிலே இழுத்து மோகத்தில் ஆழ்த்துகிறாள்!

- துர்கா ஸப்த சதீ

யோகாநந்தருக்கு அடித்த விசேஷ யோகத்தை முன்பு பார்த்தோம். அம்மாவிடம் முதன் முதலில் மந்திரோபதேசம் பெற்ற பாக்கியசாலி அவரே அன்றோ? அன்றிலிருந்து பன்னிரண்டாண்டுகள் அம்மாவின் அத்தியந்த கிங்கரராகப் பணிபுரிந்தார். அவர் ஒருவருக்கே இப்படி யோகம் அடிக்கக் கூடாதென்று போலும், விதி சதி செய்தது. விஷக் காய்ச்சலில் விழுந்தார் யோகாநந்தர்.

அம்மாவின் மனத்தில் கருமுகில்கள் குமுறின.

யோகாநந்தரின் நோய் முற்றியது. பிழைப்பது துர்லபம் என்றாயிற்று.

அம்மா பதறினாள். அந்தப் பதற்றத்திலும் அவளுக்கு இருந்த பரிவுப் பண்பு காரணமாக ஒரு தெளிவான யோசனைக்கு வந்தாள். யோகாநந்தர் பூர்வாசிரமத்தில் திருமணம் ஆனவர். இப்போது அம்மா அவரது பூர்வாசிரம மனைவியை அங்கு அழைத்து வந்தாள். தன் பதியின் மூச்சு நீங்கும் வரையில் உடன் இருந்து பணி செய்த அம்மாவுக்குத்தானே இன்னொரு பெண் மனம் தெரிய முடியும்? ''யோகின்! எந்த மருந்து எப்போ தரணும், உனக்கு வேறே என்னெல்லாம் செய்யணும்னு இந்தப் பெண்ணுக்கு எடுத்துச் சொல்லப்பா'' என்றாள். யோகாநந்தரோ விரக்தியுடன் கண்களை மூடிக் கொண்டார். ''உங்கள் இஷ்டப்படி பண்ணுங்கோ. எனக்கு ஒண்ணும் சொல்லணும்னு இல்லை'' என்றார்!

நோயாளியின் பராமரிப்போடு, நோயாளியின் மனைவியை மனம் நோகாமல் பராமரிக்கிற பொறுப்பையும் அம்மாவாக இழுத்துப் போட்டுக் கொண்டாள்!

ஒரு நாள் காலை அவள் செய்கிற பூஜைக்காகப் பூ எடுத்துச் சென்ற பணியாள், அவள் கால்களை நீட்டிக்கொண்டு இக்பிரமை பிடித்தாற்போல் அமர்ந்திருப்பதைப் பார்த்தார். அவளது கன்னத்தில் கண்ணீர்க் கோடுகள் உலர்ந்திருந்தன. ''பிள்ளாய்! விடியக்காலம் டாகுர் யோகினை அழைச்சிண்டு போக வந்திருக்கிறதைப் பார்த்தேன். நான் என்னடா செய்வேன்?'' என்று கூறி 'ஹோ' என்று அழுது விட்டாள்.

ஆம், டாகுர் யோகாநந்தரை அழைத்துச் சென்றே விட்டார்! ''பிரம்மா, விஷ்ணு, சிவன் எல்லோருடனும் டாகுர் வந்திருக்கார் அம்மா'' என்று சொல்லிக் கொண்டே இறுதி மூச்சை விட்டார் யோகாநந்தர்.

அம்மா வயிறு துடிக்கப் புரண்டழுதாள்.

அருமை யோகினைப் பற்றி அம்மா உள்ளம் மெழுகாகக் கரையப் பேசுவாள். அவள் தன்னைக் கவனித்துக் கொண்ட பாரிஷதர்களுக்குச் சிரமமே கொடுக்காதவள். இருந்தாலும், ''எனக்கு ஊழியம் செய்யறது லேசான காரியமில்லை. என் பாரம் முழுவதையும் அந்தக் குழந்தை தாங்கிண்டுது. இரண்டு பேர் என் சுமை தாங்கிகள். முதல்லே யோகின்; அப்புறம் ஷரத் (சாரதாநந்தர்)'' என்பாள்.

''அவன் சாதாரண ஜீவகோடி இல்லை. ஈசுவரகோடியைச் சேர்ந்தவன். கிருஷ்ண பகவான் நம்ம ராமகிருஷ்ண பகவானா வந்தார்; இப்போ அர்ஜுனனே யோகினா வந்தான். ஆமாம், டாகுரே அப்படிச் சொல்லியிருக்கார்'' என்று அம்மா மொழிவதுண்டு.

அம்மாவிடம் யோகாநந்தருக்கு இருந்த பக்திக்கு ஓர் உதாரணம் போதும். அவர் ஒரு நாளிலும் அவள் நிற்கும்போது அவளுக்கு நமஸ்கரித்ததில்லை. அவள் நகர்ந்தபின்பே அந்த இடத்தில் தமது தலையை உருட்டி, இதயம்பட வணங்குவார். தாம் நமஸ்காரம் செய்கிற ஒரு சில விநாடிகள் அம்மாவை நிறுத்தி வைப்பதும் அபசாரமாகும் என்று அவர் கருதியதே காரணம்!

யோகாநந்தர் தேக வியோகமான சிறிது காலத்தில் இன்னோர் இடியும் விழுந்தது. சாரதையின் வக்கிர சோதரர்களிடையே விலக்காக இருந்தவர் கடைக்குட்டி அபய சரணர். படிப்பிலும் துடிப்பாக இருந்து முன்னேறி கல்கத்தாவில் வைத்தியக் கல்வி படித்து வந்தார் அபயன். இச்சமயத்தில் பிரஸன்னர், வரதன் ஆகிய அம்மாவின் இரு சகோதரர்கள் கல்கத்தாவில் புரோகிதத் தொழில் செய்து வந்தனர்.

அவர்களோடு அபயனும் இருந்து வந்தார். அந்நாள் வழக்கப்படி அந்த இளைஞனுக்குத் திருமணமாகி, மனைவி ஸுரபாலா கருவுற்றிருந்தாள். இச்சமயத்தில் காலரா நோயை அனுப்பிக் காலன் அபயனை அபகரித்துப் போய்விட்டான். ''அக்கா, ஸுரபாலா மேலே எப்படியும் ஒரு கண் வைச்சிரு'' என்று அருமைத் தம்பி மரணப் படுக்கையிலிருந்து சொல்லிப் போய்விட்டான்! ''அப்படியே செய்கிறேன்'' என்று அம்மா கண்ணீர் வழிய வாக்குத் தந்தாள்.

அதிலிருந்து சாரதாமணியின் சரிதையே ஒரு புதுத் திருப்பம் பெற்றுவிட்டது!

யோகாநந்தரும், அபய சரணும் மறைந்தபின் அம்மாவுக்கு வாழ்வே சப்பிட்டுவிட்டது. முன்பு ராமகிருஷ்ணர் காலமானபோது தானும் உயிரை விட்டுவிட எண்ணியது போல் இப்போதும் எண்ணலானாள்.

முன்பு மரண உத்தேசம் எழுந்தபோது பதிதேவர் வந்து தடுத்ததுபோல், இப்போது ஒரு பத்து வயசுப் பெண் அவள் முன் தோன்றினாள். 'இவள் யார்?' என்று அம்மாவின் வெளி மனம் யோசிக்கும் போதே, அவளது உள் மனம் எந்த யோசனையுமின்றி அந்தப் பெண்ணை இறுகப் பற்றிக் கொண்டது. இதை விளக்கி வைக்கப் பதிதேவரும் வந்தார். ''இவளையே உன் ஜீவனத்துக்கு மையமான பிடிப்பாக வைச்சுக்கோ. இவள் கிட்ட இருக்கிற ஆசையினால் உன்னை உலகத்திலே கட்டிப் போட்டுக்கோ. இன்னும் எத்தனை பசங்கள் உன்கிட்டே வரவேண்டியிருக்கு? நீ இப்போ புறப்படறதாவது?'' என்று கூறி மறைந்தார். அந்தச் சிறுமியும் மறைந்து விட்டாள்.

'யார் அந்தப் பெண்? தன் மனத்தை அப்படிச் சுண்டி இழுத்துக் கொண்டாளே! அந்த இழுப்பில் தெய்விகம்



இழையோடவில்லை. அதிலே ஓர் அஞ்ஞான பாசமே இருந்தது! அப்படி ஒரு பாசத்தை வீசி மறைந்த பாலகி யார்? அவளிடம் பாசத்தை வளர்த்துக் கொண்டாலே அதை முன்னிட்டு உலகத்தில் தனக்குப் பிடிப்பு ஏற்படும் என்று கூறி டாகூரும் இதற்கு அநுமதி தந்து போனரே!' — இதை எண்ணி அம்மா அடிக்கடி வியந்த வண்ணம் இருந்தாள்.

கருவுற்றிருந்த ஸுரபாலா பிறந்தகத்தில் இருந்தாள். அபயனுக்கு அபய வாக்குத் தந்ததற்கேற்ப அவளைத் தன்னுடனேயே வைத்துக் கொள்ள எண்ணினாள் அம்மா. பாலிய விதவையைக் கல்கத்தாவுக்கு அழைக்க விரும்பாததால் ஜயராம்பாடிக்குச் சென்றாள். ஸுரபாலாவையும் தன் பொறுப்பில் ஏற்றுக் கொண்டாள்:

ஸுரபாலாவைப் போன்ற துரதிருஷ்டசாலியைப் பார்க்க முடியாது. அவள் குழந்தையாக இருந்தபோதே அன்னையை இழந்தாள். பிறகு தாய் வழிப் பாட்டியின் வீட்டில் வளர்ந்தாள். பாட்டியும் பெரியம்மாவும் தாயில்லாக் குழந்தையான ஸுரபாலாவைச் செல்லம் கொடுத்து வளர்த்தார்கள். இதனால் அவள் முரட்டுப் பிடிவாதக் காரியாக உருவானாள். சூல் கொண்டிருந்ததால் இயல்பாக உண்டாகும் சிரமங்கள் அவளை மேலும் புத்தி கோணலாக்கி யிருந்தது. இச்சமயத்தில் கண்ணிறைந்த கணவன் மண்ணிலே மட்கிவிட்டான். போதாக் குறைக்கு இதை அடுத்தே அவளது அருமைப் பாட்டியும் கண்ணை மூடிவிட்டாள்.

ஸுரபாலா ஜயராம்பாடிக்கு வந்த சிறிது காலத்திலேயே அந்தத் துர்ப்பாக்கியவதியை இன்னொரு வாதனை துரத்தி வந்தது. அவளது பெரியம்மாவும் காலமாகி விட்டாள். அடுத்தடுத்து மூன்று மின் விளக்குகள் ஃப்யூஸ் போனால்கூட எவருக்கும் துணுக்கம் ஏற்படும். கணவன், பாட்டி, பெரியம்மை ஆகிய மூவரையும் அடுத்தடுத்துப் பறிகொடுத்த ஸுரபாலா — ஏற்கனவே 'ஒரு மாதிரி' பேர்வழியாக இருந்தவள் — அசல் பைத்தியமாகிவிட்டாள். இந்தப் பைத்தியத்தைப் பேணுகிற பொறுப்பை இழுத்துப் போட்டுக் கொண்டிருந்தாள் அம்மா.

புத்தி தடம் புரண்டவளின் புத்திரியாக வந்து பிறந்தாள் ராதாராணி, 1900ம் ஆண்டு ஜனவரி இருபத்தியாறும் தேதி. நமது குடியரசு பிறந்ததற்குச் சரியாக ஐம்பதாண்டுகளுக்கு முன்பு அம்மாவின் மோட்ச சாம்ராஜ்யக் குடியரசு பறிபோயிற்று! ஆம், அம்மாவின் வாழ்க்கையில் பரமஹம்ஸ ராமகிருஷ்ணருக்கு எவ்வளவு முக்கியத்துவம் உண்டோ, அவ்வளவு முக்கியத்துவம் இந்த ராதாராணிக்கு உண்டு! **அது** பரம ஞானமான முக்கியத்துவம்; **இது** பரம அஞ்ஞான முக்கியத்துவம்! ஆனால் அம்மாவின் பரம ஞானம் உலகுக்குத் தொடர்ந்து கிட்ட இந்த அஞ்ஞான பந்தம்தான் காரணம். ராது என்று மற்றவர்களால் செல்லமாகவும், ராதி என்று அம்மாவினால் அதி செல்லமாகவும் அழைக்கப்பட்ட ராதாராணி பிறந்த மாத்திரத்திலேயே அம்மாவுக்கு அதனிடம் பொங்கி எழுந்தது பாசம்; அன்றொரு நாள் அவள் கண்ட பத்து வயசுப் பாலகியிடம் பெருகிய அதே பாசம்! இந்தப் பாசமே அம்மாவை உலகத்துடன் கட்டிப் போட்டது.

ராதியின் சொந்தத் தாய், சித்த ஸ்வாதீனமிழந்திருக்க, குஸும குமாரி என்கிற காசி நகரப் பெண் செவிலித் தாய் போல் அவளைப் பார்த்துக் கொள்ள, சத்தியத் தாயான சாரதை அவளைத் தன் குழந்தைகளிடையே முதற் குழந்தையாக்கிக் கொண்டாள்!

ஒரு நாள் துணிகளைக் கிழித்துப் புஜத்தின் கீழ் இடுக்கிக் கொண்டு, ஏதோ பெரிய காரியம் சாதிப்பது போல் வாசலுக்கு ஓடினாள் ஸுரபாலா. 'வீல் வீல்' என்று கத்திக் கொண்டு ராதுவும் அவளுக்குப் பின்னால் தன் மெல்லிய உடல் முரட்டுத் தரையில் உராய இழுத்துக் கொண்டே போயிற்று. ஸுரபாலாவிடமிருந்து தாய்மை அடியோடு விடைபெற்றுவிட்டது. அவள் ராதியை லட்சியம் செய்யாமல் போய்க் கொண்டிருந்தாள். குழந்தை வராந்தா ஓட்டிலிருந்து கீழே விழுகிற நிலை! அம்மாவுடைய இதயத்தின் உட்கருவுள் பரிவும் பரிதாபமும் அம்புகளாகப் புகுந்து வதைத்தன. ''அப்படியானால், என்னுடைய விசித்திர பாசத்தை வளர்த்துக் கொண்டு இந்தக் குழந்தையை நான்தான் வளர்க்க வேண்டுமா? தகப்பனை இழந்ததோடு தாயையும் உயிருடனேயே இழந்த குழந்தைக்கு யார் கதி? அம்பிகே, உன் திருவுள்ளம் இதுதானா? டாகூர், என்னை உலகத்திலேயேதான் கட்டிப் போடுகிறீர்களா?'' என்று குழம்பியவாறே அம்மா அந்தக் குழந்தை பின் ஓடி அதை எடுத்துக் கொண்டாள். ஏனோ அந்த ஸ்பரிசமே அவளை இனம் புரியாத பந்தத்தில் கட்டியது. ''இது எனக்குத் தகுமா?'' என்று தடுமாறினாள்.

அவள் எதிரே பிரஸன்னமானார் ராமகிருஷ்ணர். ''அதே பெண்தான் இது. இவளையே உன் ஜீவனத்துக்குப் பிடிப்பா வைச்சுக்கோ. இதுதான் யோகமாயை' என்று கூறி அந்தர்தானமானார்.

> இறைவன் என்பது எப்போதும் உள்ளுற இருப்பதாயினும், பகவானை நாம் சதா சிந்தித்தாலே அதை உணர முடியும். பூவுக்கு மணம் உண்டு எனினும் நாம் அதை மூக்கில் வைத்து இழுத்தால்தானே வாசனை தெரிகிறது? சந்தனத்தின் மணத்தை இழைத்துப் பார்த்தால் தானே அறிய முடிகிறது?
>
> - தூய அன்னை ஸ்ரீ சாரதாதேவி

மனிதர்களுக்கு யோக ஞானம் மட்டுமே உண்டு. பரம்பொருளுக்கோ யோக மாயை என்று ஒன்று உண்டு. யோகம் என்றால் 'சேர்ந்திருப்பது'. மனிதர்கள் பரமனோடு சேர்ந்திருப்பது யோகம். யோகத்தில் நிலைத்துவிட்டால் பிறகு 'சேருவது' என்கிற இருமை போய் ஒன்றே நிற்கும். ஒன்றேயான பரம்பொருளின் யோகம் என்ன? அது வேறு எதோடு சேர்ந்திருக்க முடியும்? தன் ஒருமையைத் தானே மறைத்துக் கொண்டு பலவாகக் காட்டுகிற மாயையுடன் அது சேர்கிறது. இந்த யோக மாயைதான் நமது லோக மாதாவை இப்போது மயக்குகிறது. எதற்காக? அவளை உலகோடு சேர்த்து வைக்கத் தான். மாயையான பராசக்தி ஞானிகளையும் மயக்கத்தில் தள்ளுவாள் என்கிறது துர்கா ஸப்த சதி. அப்படித் தள்ளுவது கொடூரமல்லவா என்று தோன்றலாம். அது கொடூரம் அல்ல, பரம கருணையே என்று சாரதையின் சரிதை எடுத்தியம்புகிறது. ஞானிகளும் யோகிகளும் உலகத்தை வெறும் மாயையாகவே உணருகிற நிலையில், இதற்கு நல் வழி காட்டும் பணியிலும் விருப்பம் இழந்து, மூலத்தில் ஒன்றிவிட எண்ணுவார்கள். அச்சமயங்களில் உலக உத்தாரணத்துக்காகவே அவர்களையும் ஏதோ ஒரு மாயையில் ஈடுபடுத்தி வாழச் செய்து, அவர்கள் மூலம் உலகை வாழ வைக்கிறாள் பராசக்தி.

ராமகிருஷ்ணர் புவிக்குத் திரும்பி வராமல் நிர்விகல்ப சமாதியில் கரைந்து விடாமலிருக்கவே அவருக்குள் சில அற்ப மயக்குகளைத் தூவி இருந்தாள் தேவி. புகைக் குழாய் பிடிக்க வேண்டும், பொன்னுங்கண்ணிக் கீரை உண்ணவேண்டும் என்பது போன்ற சிறிய ஆசைகள் அவரைப் புவிக்குப் பிடித்திழுத்து வந்தன. அம்மாவுக்குச் சிறிய பல ஆசைகளை வைக்காமல் ஒரே ஒரு பெரிய பாசமாக ராதாராணியை அனுப்பி வைத்திருந்தாள் அகிலாண்ட நாயகி. ஆகாய விமானத்தின் வேகத்தை மட்டுப்படுத்த பல சிறிய கருவிகள் அதற்குள்ளேயே இருப்பதுபோல், ராமகிருஷ்ணருக்குள்ளேயே சிறிய ஆசைகள் இருந்தன. பெருந்தேரை நிறுத்த வெளியிலிருந்து பெரிதாக ஒரே ஒரு முட்டுக்கட்டை போடுவது போல், அம்மாவின் உள்ளம் பரம் பொருளுக்குத் தாவாமல் தடுக்கும் ஒரே முட்டுக்கட்டையாக வந்தாள் ராது. சீதாதேவியின் சரிதத்தில் மாயமானுக்கு உள்ள முக்கியத்துவம், சாரதையின் வாழ்வில் யோக மாய மருமானுக்கு உண்டு.

''ராது, ராது'' என்று அல்லும் பகலும் அவளே நினைவாக அம்மா வாழத் தொடங்கி விட்டாள்.

'' உங்களுக்கு இத்தனை பற்று இருப்பது நல்லதா தாயே?'' என்று அவளிடமே பலர் கேட்டதுண்டு.

''என்ன செய்யலாம்? நாங்க பொம்மனாட்டிகள். எங்களுக்குப் பாசமே சுபாவமாயிருக்கு'' என்று கூறி அம்மா மழுப்பிவிடுவாள்.

பிறிதொரு சந்தர்ப்பத்தில் ''ரொம்பப் பேர் சொல்றா, நான் ராதுகிட்ட மகத்தான பாசம் வைச்சிருக்கேன்னு. ஆனால் அந்தப் பாசம் இல்லேன்னா இந்தச் சரீரம் பூலோகத்திலே தங்கியிருந்திருக்காது. அவரிட்ட காரியத்தை நான் செய்யணும் என்கிறதுக்காகவே சதா ராதுவைப் பற்றிய சிந்தனையிலே, என்னை இழுத்து விட்டிருக்கார்'' என்றாள். தொடர்ந்து உறுதியோடு கூறினாள்: ''**என் மனசு எப்போ ராதுவைவிட்டு விலகுமோ, அப்போ இந்த சரீரமும் போயிடும்.** நான் உலகத்திலே தொடர்ந்து இருக்கணும்னே இவளைப் பற்றிக் கவலைப்படுகிற மாயையை நானாக அங்கீகாரம் பண்ணிண்டிருக்கேன்.''

இரண்டும் கெட்டானாக முரண்டு பிடிக்கும் ராது, பைத்திய ஸுரபாலா, பணத்துக்குப் பறக்கும் சகோதரர்கள் இவர்களிடையே சாரதாமணியின் ஜயராம்பாடி வாழ்வு ஓடிக் கொண்டிருந்தது. இது போதாதென்று உலகத் துயரங்கள் வேறு ஜயராம்பாடியைத் தேடி வந்தன. 'ஹோலி மதர்'க் பிரசித்தி பெற்றுவிட்ட சாரதைக்குத் தங்கள் குறைகளை முறையிட்டுப் பலர் கடிதம் எழுதலானார்கள். இத்தனை துயருக்கிடையில், இன்முகத்துடன் வாழ்ந்து வந்தாள் தேவி. தன் சொந்த சிரமம் காரணமாக அவள் ஒருபோதும் எரிச்சல் கொண்டு இன்னொருவர் மனத்தைப் புண்படுத்தியதே கிடையாது.

சகோதரர்கள் தன்னிடம் ஓயாமல் பணம் பிடுங்கியும் திருப்திப்படாமல் நச்சரிப்பது குறித்து ஒரு நாள் அம்மா சீடப் பிள்ளையிடம் வேதனைச் சிரிப்புடன் சொன்னாள்: ''வேடிக்கைதான், என் உடன் பிறப்புக்கள்னு பேரு, தொண்டைத் தண்ணி காயற மட்டும் 'பணம்

பணம்'னு அடிச்சுக்கறதுகளே ஒழிய, தப்பித் தவறிக்கூட, 'பக்தி வரணும், ஞானம் வரணும்'னு கேட்கிறதில்லே.''

தமக்கையைக் கவனித்துக் கொள்வதில் — அதாவது, கவனித்துக் கொள்ளாமலிருப்பதில் — அவர்களுக்குள் போட்டி வேறு! ஒருவர் அவளிடம் சிறிது அதிகமாகக் கரிசனம் காட்டினால், மற்றவர் அவரிடம் 'அக்காளைக் காக்காய் பிடித்தாயோ?' என்று சண்டை பிடிப்பான்! ஒரு முறை அம்மா கல்கத்தாவிலிருந்து ஜயராம்பாடிக்கு மாலை மங்கும் சமயத்தில் வந்தபோது, முன் கூட்டியே அறிவித்திருந்தும், ஆமோதர் ஆற்றங்கரைக்குச் சோதரர் எவரும் வரவில்லை. வீட்டுக்கு வந்த அம்மா பிரஸன்ன குமாரிடம், ''என் பசங்கள் கூட வந்ததாலே நல்லபடியா ஆச்சு! நீ வராவிட்டாலும் யாரையாவது அனுப்பிச்சு வச்சிருக்கக் கூடாதோ?'' என்று கேட்டாள். ''எனக்கு மட்டும் மனசிலே இல்லையா அக்கா! கேளே எதையாவது சொல்லுவான்னுதான் பயம். அதை எதிர்த்துண்டு காரியம் செய்யற பலத்தை பகவான் எனக்குக் கொடுக்கலை. உன் மகிமையும், உன் பசங்களான இந்த சாதுக்களின் பெருமையும் எனக்குத் தெரியாமல் போகலை'' என்று கூறிய பிரஸன்னரின் உள்ளத்தில் தன்னையுமறியாமல் தழுதழுப்பு உண்டாயிற்று. ''அக்கா! ஜன்ம ஜன்மத்துக்கும் உன் தம்பியா நான் பிறக்கணும். ஆசிர்வாதம் பண்ணு'' என்றார்.

அம்மா கூசினாள்; தோளைக் குலுக்கிக் கொண்டாள். ''மறுபடி இந்த அகத்திலேயா? போதும், போதும்! 'இந்தக் கௌசல்யை இன்னொரு ஜன்மா எடுக்காம இருக்கணுமே! இவ தபஸ் பண்ணி நான் மறுபடி இவ வயிற்றிலே வந்து பிறக்காமல் இருக்கணுமே' என்று ஸ்ரீ ராமசந்திரனே அலுத்துண்டாராம்'' என்றாள்.

''அக்கா, எத்தனையோ பக்தாளுக்கு நீ சொப்பனத்திலே போயே மந்திரோபதேசம் பண்ணி, 'நான் காப்பாத்தறேன்'னு வாக்குக் கொடுக்கறே. உன் மடியிலே போட்டுண்டு வளர்த்த நாங்க மட்டும் இப்படி அஞ்ஞான பிண்டமாவே இருக்கப் போறோமா?''

பிரஸன்னர் இப்படி இளகிப் பேசிய போது அம்மா பட்டுக் கொள்ளாமலே சொன்னாள்: ''பகவத் சங்கற்பப்படிதான் நடக்கும். கிருஷ்ணனோட விளையாடினவாளுக் கெல்லாம் அவன் யாருன்னு தெரிஞ்சுதா என்ன?''

''அக்கா, நாம ஒரு தாய் வயிற்றிலே யிருந்து வந்தவா. எங்க கதிதான் என்ன?''

> உன் இதயத்தின் அடி ஆழத்தில் எப்போதும் பகவந் நாமத்தை ஜபித்துக் கொண்டேயிரு. குருநாதனிடம் அந்தரங்கமாக அடைக்கலம் புகு. உய்வு பெறுவது திண்ணம். ''வெளி விஷயங்களைக் குறித்து என் மனம் எப்படிப் பாதிக்கப்படுகிறது; ஆத்மிகத்தில் முன்னேறி வருகிறேனா?'' என்றெல்லாம் ஓயாமல் கணக்குப் போட்டுக்கொண்டு கவலைப்படாதே. தனக்குத்தானே முன்னேற்றத்தை எடை போட்டுக் கொள்வதும் ஒருவித அகங்காரம் தான். குருவிடமும், இஷ்டதேவதையிடமும் அசையா நம்பிக்கையுடன் நாம ஜபம் செய்து வந்தால், தன்னால் லட்சியம் கைகூடும்.
>
> - தூய அன்னை ஸ்ரீ சாரதாதேவி

சட்டென்று சாரதையைக் கருணைப் புயல் வந்து புரட்டியது: ''ஆமாண்டா கண்ணு! நாம்ப ஒரே வயிற்றிலிருந்து வந்தோம். அதுவே போறுமே! உனக்கு ஏன் இனியும் பயம்?''

'நானிருக்கப் பயம் ஏன்?' என்கிறாள்.

சியாமசுந்தரிக்கு வயோதிகம். அவளது மாற்றுப் பெண்கள் ஏனோதானோதான். அம்மாவே அந்தப் பெரிய குடும்பத்துக்காக ஓயாமல் உழைத்தாள். நெல் விளைந்து வந்தது. அதையெல்லாம் கோட்டை அடுப்படியில் நாள் கணக்காக அமர்ந்து புழுக்கினாள். உரலில் குற்றிப் புடைத்தாள். இது தவிர சமையல், நீர் சேந்துவது, பாத்திரம் தேய்ப்பது போன்ற 'ஜாடுமாரி'கள் வேறு. வேலை மிகுதியினால் அம்மாவின் கால்கள் தூண் தூணாக வீங்கி யிருந்தன. சிறிது சிரம பரிகாரமாக அம்மா காமார்புகுரில் இருந்து வருவதற்காகச் சென்றாள். அவள் சிரம பரிகாரம் கொள்வது ஆண்டவனுக்கு அடுக்கவில்லை. காலராக் கண்டு ஜீவனொடுங்கி விழுந்தாள். முன்பு நமக்குப் பரிசயமான ஸாகரம்மாதான் வந்து பணிவிடை செய்தாள். ''அன்பே, அசிங்கம் பார்க்காம எல்லாத்தையும் சுத்தி பண்ணறியே! எனக்குக் கூச்சமாயிருக்கு'' என்றாள் அம்மா நெகிழ்ந்து.

''என்னம்மா! ஒனக்கு ஸெய்யறதுக்கா அசிங்கம் பார்ப்பாங்க? நீ ஸும்மா இரு'' என்றாள் ஸாகரம்மா.

அம்மா காலராக் கண்டு கிடக்கிறாள் என்றறிந்து பேலூர் மடத்திலிருந்து இரு பசங்கள் வந்தனர். ஆனால் அம்மா அந்த ஸ்திதியில் கல்கத்தாவுக்குச் சென்று பக்தர்களை உபத்திரவிக்க விரும்பாமல் ஜயராம்பாடிக்கே திரும்பினாள். போகு முன் ஸாகரம்மாவிடம், ''உனக்கு அன்ன வஸ்திரத்துக்கு ஒரு நாளும் குறைவு வராது'' என்று மனமார வாழ்த்தினாள்.

பிற்காலத்தில் ஸாகரம்மா சொன்ஞள்: ''அம்மா வாய் முகூர்த்தம், அதுக்கப்புறம் ஸோறு, துணி எனக்கு செழுத்தியாக் கிடைச்சுக்கிட்டே இருக்குது. அம்மா பூசை பண்ணுவாங்களே, அந்த டாகூருதான் எனக்காக எல்லாம் செஞ்சுட்டிருக்காரு.''

ஜயராம்பாடியில் சாரதைக்கு இன்ஞெரு பொறுப்பும் வந்து சேர்ந்தது. எங்கேயோ சமையல் வேலே செய்து வந்த ஒன்றிக்கட்டையான அவளது சித்தப்பா நீலமாதவர், தள்ளாமை வந்ததால் வேலேயை விட்டு, நம் அம்மாவிடம் வந்து விட்டார். அவருக்கும் மனம் கோஞமல் பார்த்துப் பார்த்துப் பணி செய்தாள் அம்மா.

ராதியையும் சுரபாலாவையும் உத்தேசித்து ஜயராம்பாடியிலேயே தங்கிவிட்ட அம்மாவுக்குக் கல்கத்தா பக்தர்கள் அன்புத் தொல்லே இழைத்தனர். அம்மாவுக்கும் அந்தக் குழந்தைகள் தன் வீடு தேடி வந்தால்தான் அநுக்கிரகம் செய்வேன் என்று விட்டேற்றியாக இருப்பது நியாயமாகத் தோன்றவில்லே. ராதி ஒருத்திக்காக மற்ற அத்தனே குழந்தைகளேத் தியாகம் செய்ய முடியுமா? பக்தர்கள், ''கல்கத்தாவுக்கு உங்கள் தம்பி மனேவி, மருமகள், சிற்றப்பா எல்லோரையும் அழைத்து வரலாமே! எல்லோருக்குமே வசதி செய்து தருகிறோம். அவ்வப்போது இப்படி எங்களிடை வந்து அநுக்கிரகிக்க வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டனர். அவ்வாறே அம்மா இந்தப் பரிவாரங்களுடன் கல்கத்தாவுக்குச் சென்று போஸ்பரா சந்தில் வசிக்கலாஞள்.

கல்கத்தாவில் அம்மாவைப் பார்க்க மரியாதைப்பட்டவர்கள் பலர் வந்த போது ஸுரபாலா செய்த அநாகரிகத் தொல்லேயைச் சொல்லி முடியாது. அம்மாவும் பொறுத்துப் பொறுத்துப் பார்த்தாள். கடைசியில் ஸுரபாலாவின் வெறியாட்டம் அதிகரித்ததால் அவளோடு ஜயராம்பாடிக்குத் திரும்பிஞள் அம்மா.

அடுத்த இரண்டாண்டுகள் அம்மா நரக வாசமே செய்தாள் எனலாம். இரண்டாவது, மூன்ருவது வயதில் எல்லாக் குழந்தைகளுமே இனம் புரியாமல் படுத்தும் அல்லவா? பொதுவாக ராது சமர்த்துப் பெண். எனினும் ஒவ்வொரு சமயங்களில் மகா அடங்காப் பிடாரியாக ஆகிவிடுவாள். அவளேயும் ஸுரபாலாவையும் சமாளிப்பதற்கு அம்மா பட்டபாடு சொல்லத்தரமன்று.

பணத்தாசையே ஒரு பைத்தியம் போலும்! பணப் பைத்தியம் என்று சொல்கிறேம் அல்லவா? ஸுரபாலா இதை நிதரிசனமாக்கிஞள். மூளே தடம் புரண்டுவிட்ட அவளுக்குப் பணத்திடம் மட்டும் இழை புரளாத பற்றுதல் இருந்தது. அம்மாவிடம் அடியார் செலுத்தும் காணிக்கைக்குத் தானும் ராதுவும் மட்டுமே பாத்தியதைப் பட்டவர்கள் என்பது ஸுரபாலாவின் கட்சி. சாரதாமணியை அவளது தாயாரோ, தம்பிகளோ, அவர்களது மனேவி மக்களோ நெருங்க விட மாட்டாள் ஸுரபாலா. ''அவாளுக்கு ஏதாவது கொடுத்தேனே தெரியும் சேதி!'' என்று நாத்தியிடம் உருமுவாள். யாராவது பக்தர்கள் வீட்டுக்கு வந்தால், ''எனக்கும் என் பெண்ணுக்கும் சேர வேண்டியதை யெல்லாம் கொட்டிண்டு போகப் பாவிகள் வந்திருக்காளே!'' என்று பிரலாபிப்பாள். அம்மா கண்ணீரைக் கட்டுப்படுத்திக் கொண்டு வாயடைத்து நிற்பாள். இந்தச் சூழலில் அம்மாவைத் தாங்களும் சிரமப்படுத்த வேண்டாம் என்று கருதிப் பக்த கோடிகள் ஒதுங்கியே இருந்தனர்.

ஸுரபாலா தன் பெண்ணிடம் ''உன் அத்தை ராட்சஸி. அவ கிட்டே போகாதே. உன் பெரியப்பா பசங்களுக்குத்தான் அவ வாரி வழங்குவா'' என்றெல்லாம் உபதேசிப்பாள். ஆஞல் ராதுவோ அத்தையை ''அம்மா'' என்றழைத்து அவளிடமே ஒட்டிக் கொண்டது. ஸுரபாலா கைம்பெண் என்பதால் கூந்தலேக் களேந்திருந்தாள். அவளே ''வழுக்கைத் தலே அம்மா'' என்று கூப்பிடுவாள் ராது. சாரதையின் குடல் மண்டி எழும்.

அம்மா அக்ஞாத வாசம் செய்த இந்தக் காலத்தில்தான் பாரத மாதாவின் தவப் புதல்வரும், நம் அம்மாவின் ஆசை மகனுமான ஸ்வாமி விவேகாநந்தர், நாற்பது யுகங்களில் சாதிக்க வொண்ணுத ஆத்ம மறுமலர்ச்சியை நாற்பதே ஆண்டுகளுக்குள் முடித்து விட்டு, ''என் பணி தீர்ந்தது'' என்று பராசக்தியிடம் போய்விட்டார். டாகூரின் பணி தீர்ந்தது; நரேன் பணி தீர்ந்தது; அவர்கள் விடுதலே கண்டனர்; அம்மாவின் பணிதான் திருவதாக இல்லே. அவர்களுக்கில்லாத அத்தனே தொல்லேகளேயும் அந்த மெல்லியலே தாங்கிக் கொண்டிருக்க வேண்டும் என்பது திவ்விய சங்கற்பமாயிற்று. பதியும் பிள்ளேயும் மாயையைக் கடந்து போயாச்சு! மணமிடிந்த சாரதையோ மாயையே உருவான ராதியுடன் மல்லுக் கொடுத்துக் கொண்டிருந்தாள். (தொடரும்)



# மனிதன் எவ்விதம் வாழ்கிறான்..?

மனிதன் வாழ உணவு மட்டுமிருந்தால் போதுமா? உணவைப் போலவே வாழ்க்கைக்கு அன்பும் அரவணைப்பும் அவசியமல்லவா! உணர்ச்சிகளும், அழகும் வாழ்க்கையுடன் பிணைந்து இருக்கின்றன. வாழ்க்கையே ஒரு கலை. நன்கு திட்டமிடுதல் அதற்கு அடிப்படை. வாழ்வின் எல்லா அம்சங்களையும் திட்டமிடும் நாம் ஏன் நம் குடும்ப அளவையும் திட்டமிடக்கூடாது?

வாழ்க்கையில் அன்பு, பாசம், ஒத்துழைப்பு, பரஸ்பர நல்லுணர்வு பெருக குடும்பக் கட்டுப்பாடு திட்டத்தைப் பின்பற்றுங்கள்.

davp 71/617

# இளைஞர் சமுதாயம்




உற்சாகமாகப் பொதுத் தொண்டில் ஈடுபடும் வாலிபர்களைச் சந்திக்கும் இந்த அரிய வாய்ப்பு ஏற்பட்டதிலிருந்து இன்னும் எந்த வாலிபர் சங்கத்துக்குப் போகலாம் என்ற யோசனையிலேயே என் மனம் ஈடுபட்டு வருகிறது. ஈரோடு ஜூனியர் சேம்பர் என்ற இளைஞர் சங்கத்துக்குப்போவதென்ற தீர்மானத்துடன் ஈரோடுக்குப் புறப்பட்டேன். ரயில் தாமதமாகப் போய்ச் சேர்ந்ததனால், அந்தச் சங்கத்தின் மாதாந்தரக் கூட்டத்துக்குப் போக முடியாமற் போய்விட்டது. ஈரோடில் இரவு தங்கி மறுநாள் அந்தச் சங்கத்தின் தலைவரைப் பார்ப்பது என்று தீர்மானித்தேன்.

லாட்ஜ் தேடுகிற சாக்கில் ஈரோடு நகரம் முழுதும் சுற்றிவிட்டேன். கல்யாண சீஸனாதலால் எந்த லாட்ஜிலும் இடம் இல்லை. கடைசியில் ஒரு லாட்ஜில் இடம் கிடைத்தது. நன்றாய் அலைந்திருப்பதனால் இரவு அயர்ந்து தூங்கிவிடுவேன் என்று நினைத்தேன். ஆனால் தூக்கம் வரவில்லை. ஈரோடு ஜூனியர் சேம்பர் சங்கத்தின் தலைவரைப் பார்த்துக் காலையில் பேச வேண்டுமே என்று கவலையா யிருந்தது. அவர்கள் மாதாந்திரக் கூட்டத்தில் கலந்து கொண்டிருந்தால் சௌகரியமா யிருந்திருக்கும். காலையில் அவர் என்னைச் சுமுகமாக வரவேற்றுப் பேசி, எனக்குத் தகவல்கள் தந்து உதவ வேண்டுமே என்று வேதனைப்பட்டுக் கொண்டிருந்தேன்.

காலை ஆறரை மணிக்கே ஈரோடு ஜூனியர் சேம்பரின் தலைவர் திரு எஸ். என். பி. சண்முகம் வீட்டுக்குச் சென்றேன். அவர் ஓர் ஆடிட்டர்; இளைஞர்தான். நான் அவர் வீட்டுக்குச் சென்று என் வருகையைச் சொல்லி அனுப்பியதும் உள்ளேயிருந்து வந்து இன்முகம் காட்டி வரவேற்றுத் தம் ஆபீஸ் அறைக்கு அழைத்துச் சென்றார்.

"நீங்கள் 'கல்கி'யின் மூலம் செய்து வரும் இந்தப் பணி மிகவும் நல்ல பணி. உண்மையாகவே இளைஞர்களுக்கு ஊக்கம் அளிக்கும் பணி. 'இந்தக் காலத்து இளைஞர்களுக்குப் பொறுப்பே இல்லை. சொன்னதைக் கேட்பதில்லை. படிப்பில் அக்கறை காட்டுவதில்லை' என்று வாலிபர்கள் மீது பெரியவர்கள் எல்லாருமே குறைப்பட்டுக் கொள்ளுவது சகஜமாகி விட்டது. ஆனால் குறை பெரியவர்களிடம் தான் இருக்கிறது. வாலிபர்களை உற்சாகப்படுத்தி நல்ல பொதுப் பணிகளில் ஈடுபடுத்த வேண்டும். எங்கள் சேம்பர் அனைத்துலகத் தொடர்பு கொண்டது. அமெரிக்காவில் மியாமி, ஃப்ளாரிடா ஆகிய ஊர்களில் உள்ள (Junior Chamber International) சங்கத்துடன் இணைந்து பணியாற்றி வருகிறது. மேல்நாடுகளில் உள்ள இன்றியமையாத பிரச்னை இளைஞர் சமுதாயத்தைப் பற்றியது தான். அவர்களை ஒற்றுமைப்படுத்தி நாட்டு நலன்களைப் பேணிக் காக்கும் நற்பணிகளில் ஈடுபடுத்திவிட முயல்வதுதான் எங்கள் சங்கத்தின் முக்கியமான லட்சியம்" என்று கிடுகிடுவென்று பொரிந்து தள்ளிவிட்டார் தலைவர்.

அவர் பேச்சைக் கேட்டதும் என் கவலை இருந்த இடம் தெரியாமல் பறந்து விட்டது.

சங்கத்தின் நோக்கங்கள் சிலவற்றைப் பார்ப்போம்.

இளம் பிராயத்திலேயே தங்களுக்குள்ள பிரஜா உரிமையை உணர்ந்து பொறுப்புடன் நடந்துகொள்ள வழிகாட்டுதல்.

ஒவ்வோர் இளைஞனும் சங்கத்தின் பயிற்சித் திட்டங்களில் கலந்து கொண்டு தலைவனாகும் தன்மையைப் பெறச் செய்தல்.

பொதுவாகச் சமுதாயத்துக்கும், குறிப்பாகத் தனக்கும், ஆக்கம் அளிக்கும் சங்கத்தின் திட்டங்களில் தீவிரமாகப் பங்குகொள்ள வற்புறுத்துதல்.

மக்கள் நலனையே லட்சியமாகக் கொண்டு நற்பணிகளில் அக்கறை காட்டுதல்.

" இந்த லட்சியம் நிறைவேற நீங்கள் உங்கள் சங்கத்தில் என்ன செய்கிறீர்கள் ?" என்று ஒரு கேள்வியை எழுப்பி மேலும் விளக்கம் பெற முயன்றேன்.

"முதலில் இளைஞர்கள் மனத்தில் தன்னம்பிக்கை ஏற்படுத்துகிறோம். எதிலும் அவநம்பிக்கை கொள்ளும் அவல நிலையைப் போக்குகிறோம். பதினெட்டு வயதிலிருந்து நாற்பது வயது வரையில் இந்தச் சங்கத்தில் அங்கத்தினராயிருக்கலாம் என்ற விதியை ஏற்படுத்தியிருக்கிறோம். இளைஞர்கள் சுதந்திரமாகச் சிந்திக்கவும், சுதந்திரமாகச் செயல்படவும் நிறைய வாய்ப்புக்கள் ஏற்படுத்தித் தருகிறோம். அதற்கு முதற்படியாக, இளைஞர்

களின் கூச்சத்தை, முக்கியமாக மேடைக் கூச்சத்தை ஒழிக்க அவர்களுக்கு மேடைப் பேச்சில் பயிற்சியளிக்கிறோம். பயிற்சி பெறும் இளைஞன் எதைப் பற்றி வேண்டுமானாலும் பேசலாம். அதிகமாகக் கூச்சப்பட்டுக் கொண்டு யாருடனும் பேசத் தயங்கும் பிரகிருதிகளுக்குத்தான் முதல் சான்ஸ்! இந்த முறையைக் கையாண்டதனால் பல சிறந்த மேடைப் பேச்சாளர்கள், சமூகம், பொருளாதாரம், இலக்கியம் ஆகியவற்றிலும் தோன்றியிருக்கிறார்கள்.

"மாணவர்களுக்கு மேடைப் பேச்சில் திறமை ஏற்பட வேண்டும் என்று நீங்கள் தீர்மானித்ததற்குக் காரணம் கூறமுடியுமா?"

"ஆகா! நம் நாடு சுதந்திரம் அடைந்ததே பேச்சுத் திறமையை வைத்துத்தானே? ஆகவே, அதற்கு ஒரு முக்கியத்துவம் கொடுத்திருக்கிறோம்!"

"பள்ளிக்கூடங்களிலும், கல்லூரிகளிலும் கூட இம்மாதிரியான பயிற்சி அளிக்கிறார்கள்."

"....ஆனால் நாங்கள் பயிற்சி அளிக்கும் முறையே வேறு. இளைஞர்கள் இஷ்டத்துக்குப் பேசும் உரிமையைச் சற்றுத் தாராளமாகவே அளித்து அவர்கள் தவறு செய்வதற்கும் சந்தர்ப்பம் கொடுத்து அவர்களைத் திருத்துகிறோம். அவர்களுடைய தோல்வி மனப்பான்மையைப் போக்குவதுதான் எங்களுடைய நோக்கம்" என்றார் தலைவர்.

"மேடைப் பேச்சில் திறமை பெற்றுவிட்டால் ஒருவனுடைய தோல்வி மனப்பான்மை நீங்கிவிடும் என்று சொல்லிவிட முடியாது..." என்று சற்று இழுத்தாற்போல் சொன்னேன்.

"இதற்குத்தான் எங்களுடைய மாதாந்திரக் கூட்டத்தில் ஒரு தடவை கலந்து கொள்ள வேண்டும் என்று உங்களுக்கு எழுதினோம். நீங்கள் அதற்கு வராமல் இன்று தனியாக வந்திருக்கிறீர்கள். அப்பொழுது வந்து பார்த்திருந்தால் எங்கள் முயற்சி எவ்வளவு



தூரம் பயன் அளித்திருக்கிறது என்பது விளங்கும். பத்திரிகைக்காரர்களாகிய நீங்களெல்லாமே இப்படித்தான். எதையுமே 'லைட்'டாக எடுத்துக் கொண்டு 'ஜோக்' பண்ணுவது! ஒரு 'ஸீரியஸ்னெஸ்'ஸே கிடையாது" என்றார்.

"தயவுசெய்து அதை விளக்கமாகச் சொல்லுங்கள்!" என்று கேட்டேன்.

"எதை?" என்று கேட்டார் தலைவர்.

"பத்திரிகைக்காரர்களுக்கு 'ஸீரியஸ்னஸ்' கிடையாது என்கிறீர்களே, அதை?" என்றேன்.

"ஓர் உதாரணம் சொல்லுகிறேன். உபாத்தியாயர் மாணவனைப் பார்த்துக் கேட்கிறார்: 'எனக்குச் சம்பளம் எதற்காகக் கொடுக்கிறார்கள்?' மாணவன், 'தெரியவில்லை ஸார்!' என்கிறான். உபாத்தியாயர் கோபத்துடன், 'முட்டாள், இது தெரியவில்லையே! நான் வேலை செய்வதற்காகக் கொடுக்



கிறார்கள்' என்கிறார். அதற்கு மாணவன், 'நீங்கள் என்ன வேலை செய்கிறீர்கள், ஸார்?' என்று கேட்கிறான். உபாத்தியாயர் பதில் சொல்லத் தெரியாமல் விழிக்கிறார். இந்த ஜோக்கைப் படித்த மாணவன் எப்படி ஸார், உபாத்தியாயரிடம் ஒழுங்காகப் படிப்பான்?" என்று கேட்டார்.

தலைவர் பத்திரிகைகள் படிப்பவர் என்பதுடன், பத்திரிகைகளில் வரும் ஜோக்குகளைப் படித்து நினைவில் வைத்துக் கொண்டிருப்பவர் என்றும் தெரிந்து கொண்டேன். (வாசகர்களின் ஞாபகமறதியை நம்பித்தான் பல ஹாஸ்யங்களை உருமாற்றிப் பத்திரிகைகளில் மீண்டும் போடுகிறார்கள்! அந்த உரிமையை அடியோடு அழிக்கப் பார்க்கும் இந்தத் தலைவர்களைப் போன்றவர்களை என்ன செய்வது!)

"அது ஒரு ஹாஸ்யம் ஸார்! அவ்வளவுதான். அதைப் போய்ப் பெரிதுபடுத்திப் பார்க்கக் கூடாது" என்றேன்.

"சரி. அது போகட்டும். பத்திரிகைக்காரர்கள் அவசரப்பட்டு எதைப் பற்றியும் எந்த முடிவுக்கும் வந்துவிடக் கூடாது; அப்படி வந்து விடுவதோடு நின்று விடாமல்

---

(முதல் படம்) கடமை உணர்ச்சியைத் தூண்டும் இயக்கம். (இரண்டாம் படம்) ஆண்டுதோறும் கூட்டம். (பேச்சுப் போட்டி நடந்தது) இது சித்திரப் போட்டி. ஆரம்பப் பள்ளி மாணவர்கள் சித்திரம் வரைகின்றனர். (மூன்றாவது படம்) புதிய தலைவரைப் பழைய தலைவர் வரவேற்கிறார்.

அதை எழுதி வெளியிட்டு விடுவது மிகப் பெரிய தவறு. எங்கள் சங்கத்தில் எதையும் மனிதாபிமான அடிப்படையில்தான் பார்க்கிறோம். அந்த மனிதாபிமானம் ஒவ்வொரு வாலிப உள்ளத்திலும் வளர்ந்துவிட்டால், மொழி, இன, கலாசார வேறுபாடுகளெல்லாம் தாமாகவே மறைந்துவிடும். அதாவது, நாம் அதிகமாக இன, மொழி வேறுபாடுகளைப் பற்றிப் பேசாமல் இருந்தாலே அவற்றின் வலிவு குறைந்துவிடும். அதற்கு இளைஞர் சமுதாயத்தை ஆயத்தப்படுத்த வேண்டும். இளம் உள்ளங்களில் இந்த வேற்றுமைகளைப் பற்றிச் சிந்திப்பதற்கே இடம் தராமல், ஒற்றுமை உணர்ச்சியோடு சமூகப் பணியில் முனைந்து நிற்கும்படி செய்துவிட்டால் நம் நாட்டின் தற்போதைய பல பிரச்னைகளுக்குத் தீர்வு காண்பது மிகவும் சுலபமாகிவிடும்.''

பிறகு, ஏழைகளுக்கு இலவசக் கண் வைத்தியம், முத்தடுப்பு ஊசி போடுதல் ஆகியவைகளைப் பற்றித் தலைவர் கூறினார். பிறகு இன்னொர் அருமையான திட்டம் பற்றியும் கூறினார். எந்தத் தொழில் ஈரோடில் செழித்து வளரும் என்று ஆராய்ந்து அறிந்து, அரசோடு தொடர்பு கொண்டு அந்தத் தொழிலுக்கு ஆக்கம் அளித்துப் பல இளைஞர்களுக்கு வேலை வாய்ப்பளிக்க ஒரு பெரிய திட்டம் தீட்டி வருவதாகவும், அதில் வெற்றி கண்டால் இளைஞர் சமுதாயத்துக்கு ஆக்கபூர்வமான உதவி செய்ததாக இருக்கும் என்றும் கூறினார். ஈரோடு ஜூனியர் சேம்பர் ஓரளவு பணக்காரச் சங்கம் என்றுதான் கூற வேண்டும். முதலில் சேருவதற்கு நுழைவுச் சந்தா: ஐம்பது ரூபாய்! மாதச் சந்தா பத்து ரூபாய் ! அனைத்துலக அளவில் நடக்கும் சங்கமாதலால் சில செலவினங்கள் அதிகமாகவே இருக்கலாம். அதற்குச் சந்தாத் தொகை கொஞ்சம் கூடுதலா யிருப்பதில் தவறில்லையே !

— ஸோமாஸ்

---

## விநோத வழி !

அமெரிக்காவில் ஒரு கிராமத்தில் வசித்த ஜவிங் என்கிற ஒருவர் தமது அடுத்த வீட்டுக்காரரான ராபின்சனிடம் அடிக்கடி பணம் கடன் வாங்குவார். ஆனால் திருப்பிக் கொடுக்க மாட்டார்.

ஒரு தடவை ராபின்சன் வற்புறுத்திக் கேட்கவே, ''அடுத்த சனிக் கிழமை, நான் உயிரோடு இருந்தால் பணத்தைக் கொடுத்துவிடுகிறேன்'' என்றார்.

அடுத்த சனிக்கிழமை வந்தது. ஆனால் பணம் வரவில்லை. ஆகவே ஞாயிற்றுக் கிழமை காலை, ராபின்சன் கோயில் பாதிரியிடம் ''ஜவிங் இறந்து விட்டார்; ஆகவே அதைக் கிராமத்தாருக்குத் தெரி



விக்க வழக்கம்போல் சாவுமணி அடியுங்கள்'' என்றார். சாவுமணி அடிக்கப்பட்டது. ஜவிங் இறந்து விட்டார் என்று எல்லோருக்கும் அறிவிக்கப்பட்டது.

இது விஷயத்தை அறியாத ஜவிங் அப்பொழுது என்று கோவிலுக்குள் நுழைய, எல்லாரும் ஆச்சரியப்பட்டார்கள். பிறகு விஷயம் எல்லோருக்கும் தெரியவே, ஜவிங் வெட்கப்பட்டு அந்த நாளே தம் கடனை அடைத்தார்.

நாடோடி

## வேலைநிறுத்தம் செய்யுங்கள்!

இத்தாலியில் தபால்காரர்கள் வேலைநிறுத்தம் செய்து கொண்டிருந்த காலத்தில் தபால் ஊழியர்கள் சங்கத்துக்கு ஒரு கடிதம் வந்தது. அந்தக் கடிதத்தில் பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது. ''வருமான வரி இலாகாவிலிருந்தும், மற்றும் பொறுமையற்ற கடன்காரர்கள் சிலரிடமிருந்தும், நான் விரைவில் நோட்டீஸ்களை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். எனவே தயைசெய்து என்மீது கருணை காட்டுங்கள். வேலைநிறுத்தத்தை விடாது நடத்துங்கள்.''

ஆதாரம்: நியூஸ்டைம்ஸ்



## பிறந்த நாள் பரிசு !

நீங்கள் பிறந்த அன்று உலகில் என்ன நடந்தது? அமெரிக்காவில் உள்ள 'ஹெரால்ட் ட்ரிப்யூன்' அலுவலகத்துக்கு ஒன்றரை டாலருடன் நீங்கள் பிறந்த தினத்தையும் குறித்து அனுப்பினால் அந்தத் தேதியில் வெளியான ஹெரால்ட் ட்ரிப்யூன் பத்திரிகையின் முதல் பக்கத்தைப் போட்டோ பிரதி எடுத்து அனுப்புகிறார்கள்!

ஹாலிடே - பாலி

## விலையுயர்ந்த செக்

உலகிலேயே மிகப் பெரும் கோடீசுவரர் எனக் கருதப்படும் ஜே. பால்கெட்டி என்பவருக்குக் கன்னியாஸ்திரிகள் சங்கம் ஒரு வேண்டுகோள் விடுத்தது. அதாவது ஆஸ்திரேலிய நாட்டு ஆதிவாசிகளுக்குப் பள்ளிக்கூடம் கட்டுவதற்கு நன்கொடை கேட்டிருந்தது. அந்தக் கோடீசுவரரும் உடனே நன்கொடை கொடுத்துவிட்டார். அதாவது பத்து டாலருக்கு உடனே செக் அனுப்பிவிட்டார்! அந்தச் செக்கை



என்ன செய்வது என்று கன்னியாஸ்திரிகளுக்குப் புலப்படவில்லை. அதைப் பணமாக மாற்றுவதா, பிரேம் போட்டு வைப்பதா, விற்றுவிடுவதா என்று அவர்கள் திகைக்கிறார்கள். ஏனெனில் மாபெரும் கோடீசுவரரின் 'தாராளத் தன்மையை'ப் புலப்படுத்தும் நினைவுச் சின்னத்தை நூறு டாலர் விலை கொடுத்து வாங்கிக்கொள்ளப் பலர் முன்வந்து கொண்டிருக்கின்றனர்!

ஆதாரம்: நியூஸ்டைம்ஸ்




மனங்கவரும்
ஃபாயில் பேக்—
நயமான விலை

# இதோ!

# புதிய பார்லே தின் ஆரோரூட்

## போஷாக்கான பிஸ்கட்

முரமுரப்பானது, சக்தி மிக்கது—
சுலபமாக ஜீரணமாகிறது!
சாப்பிட ருசியானது!

**புதுப் பொலிவுக் குன்றாமல் அமைந்த கவர்ச்சியான பேக்குகளில்**

everest/325d/PP tam

# பிரம்மஹத்தி

• து.ராமமூர்த்தி •

சற்றுத் தூரம் நடந்ததும், ''செருப்பு இல்லாமெ நடக்கிறேனே. எனக்கே கால் குத்தறதே'' என்று ராமநாதன் பேச்சை ஆரம்பித்தார்.

காலைப் பார்த்துக் கொண்டே அவர் பேசினார். அந்தக் கால்கள், இலேசான வெளுப்பு நிறம் காட்டும் தந்தத்தில் கடைசல் பிடித்தமாதிரி இருப்பதுபோல் தோன்றின அவர் கண்களுக்கு.

''உம்.....; பரவாயில்லெ. எங்க ஊர்லெ செருப்பில்லாமெ நடந்து பழக்கந்தான்'' என்றாள் புரொபசர் மனைவி.

''ஸாரும் நம்மோட வந்திருக்கலாம்.''

அப்போது அவர் மனசு அவரைக் கேட்டது. 'ஸாரும் நம்மோட வந்திருக்கலாம்கிறியே, எதுக்காகவாம்? எதுக்காக இப்படிச் சொல்றே? வெறும் வாய் உபசாரம்தானே இது? எவ்வளவு நாளாக இந்த வேளைக்காக நீ காத்துண்டு இருந்தே? இப்ப சந்தர்ப்பம் நேர்ந்தபோது, அவரும் வந்துருக்கலாமேன்னு கதை பண்றியே!'

''இந்தக் கல்யாண கலாட்டா எல்லாம் அவருக்குப் புடிக்கிறதில்லே. 'டயர்ட்' ஆகி இருக்கும்'' என்றாள் புரொபசரின் சம்சாரம்.

''ஆமாம், டயர்ட் ஆகி இருக்கும்'' என்று ராமநாதனும் ஆமோதித்தார்.

வயசானவராச்சே? மாடி ஏறவே கஷ்டப்படுவார். க்ளாஸில் லெக்சர் பண்றச்சே மேல் மூச்சு வாங்கும். அவருக்குப் போயி இவ எப்படி வந்து வாய்த்தாள்? ஆச்சரியம்தான். நாமும் ரெண்டு மூணு இடத்துலெ பொண் பார்க்கப் போறோமே, ஒண்ணாவது நன்னாயிருந்துதா? ஒண்ணு ஏணிக் கம்பம் மாதிரி சதையே இல்லாமெ குச்சிக் காலும் குச்சிக் கையுமாய்; ஒண்ணு கத்திரிக்காய்க்குக் கால் கை மொளச்சாப்பலே; ஒண்ணு குதிரெ மூஞ்சி; ஒண்ணு அட்டெக்கரி....

'நீ மாத்திரம் செப்புன்னு எண்ணமோ? அட்டைக்கரி இல்லே; அவ்வளவுதானே?' என்று அவர் மனசு கேட்டது.

'நானும் கறுப்புத்தான், இல்லேங்கல்லே. ஆனா, கண்ணாடிலெ பார்த்துண்டா லக்ஷணமா இருக்கேனே' என்று தமக்குத் தாமே சால்ஜாப்பு சொல்லிக் கொண்டு அவர் மழுப்பப் பார்த்தார்.

'' என்ன லக்ஷணம் போ! குழந்தைமூஞ்சி! சுருட்டை மயிர்க் கிராப்பும், உப்பல் கன்னமும், சின்ன வாயும் மூக்குமாய் கிளாக்ஸோ பேபி மாதிரி....'' அவர் நண்பர்களும் மறைவில் அவரை இப்படித்தான் கேலி பண்ணினார்கள். புரொபசரிடம் மாணவராக இருந்து அவரிடமே வேலைக்கு வந்தவராதலால், புரொபசரின் சிபாரிசில், அவர் ரிடயர் ஆகும்போது அவர் இடம் தமக்கே கிடைக்கும் என்று எதிர்பார்த்து, அதற்காக புரொபசரைக் காக்காய் பிடிக்கிறார் என்றும் அவர்கள் பேசிக் கொண்டார்கள். புரொபசரைக் காக்காய் பிடிக்க, புரொபசரின் 'ஹோம் டிபார்ட்மெண்ட்' மூலம் கம்பிகளை இழுக்கப் பார்க்கிறார் என்கிற பேச்சும் அடிபட்டது.

''உங்களுக்கும் அவருக்கும் ரொம்ப வயசு வித்தியாசம் இல்லே?''

திடும் என்று கேட்டார் ராமநாதன். கேட்க வேண்டும் என்கிற எண்ணம் இல்லே. மனசு நினைத்தது; வாய்தவறி வந்து விட்டது.



''ஆமாம்'' என்ற பதிலுடன் கைகளை முன்னால் கட்டியபடியே நடந்தான் அவன்.

'' ஏன் இப்படிக் கல்யாணம் பண்ணின்டேன்னு கேக்கல்லேயே?''

ராமநாதன் திடுக்கிட்டார். யார் கேட்டது? அவளா கேட்டாள் ?

ஆமாம்; அவளேதான் கேட்கிறாள். நாம் மனகலெ நெனச்சின்டது தெரிஞ்சுடுத்தோ ? இல்லே, வயசு வித்தியாசத்தைப் பத்திக் கேட்டமே, துடுக்காப் பேசறேம்னு இடிச்சுக் காட்டறுளோ? ஏன் இந்தப் பேச்சை ஆரம்பிச்சோம் ? புரோபசருக்குத் தெரிஞ்சா என்ன ஆறது ?

''ஆமாம், மனகலெ நெனச்சுண்டேன். கேக்கத் தைரியம் வல்லே. நீங்க எப்படியோ தெரிஞ்சுண்டுட்டேள்!''

''நீங்க கேக்காட்டாலும் நானே சொல்றேன். எங்க குடும்பம் ரொம்ப ஏழைக் குடும்பம். அப்பா பள்ளிக்கூட வாத்தியார். முழுசா இருநூறு ரூபா சம்பளம்கூட இல்லே. மொதல்லே பொறந்தவா நாங்க அஞ்சு பேர் பொண்கள். அப்பா ஆண்டியும் ஆகல்லே. சன்யாசியும் ஆகல்லே. அதுக்கப்புறம் மூணு புள்ளைகள்தான் பெத்தார். பொண்கள்ளாம் கல்யாண வயசு வந்து நிக்கறச்சே, புள்ளைகள் பள்ளிக்கூடம் போக ஆரம்பிச்சா. ஆயிரம் ஆயிரமா செலவழிச்சு ஒவ்வொரு பொண்ணுக்கும் கல்யாணம் பண்ணனும்னு, எங்கே போவார் அப்பா ? இவர் இளையாளைத் தேடின்டு மலையாளம் வந்து, எங்களுக்குச் செலவே வைக்காமே, தாமே செலவு பண்ணிக் கல்யாணம் பண்ணிக்கிறேன்னதும் சரின்னுட்டார் அப்பா.''

'' நீங்க ?''

''என்னெ யார் என்ன கேட்டா ? நான் அப்போ இன்னும் சின்னவ. எனக்கு ஒண்ணும் புரியவும் இல்லே. அதோடெ, அப்பா கஷ்டம் விடிஞ்சாப் போறும்னு இருந்தது எங்களுக்கெல்லாம். எனக்கு என்ன 'நீங்க' பட்டம்? ஒங்களெ விடக்கூட நான் சின்னவள் தான்.''

அவள் குரலில் ஓர் இனிமையைக் கண்டார் ராமநாதன். தம்புரா சுருதியைச் சர்க்கரைப் பாகில் குழைத்து மீட்டுகிறப் போல் இருக்கிறது என்று கற்பனை பண்ணிக் கொண்டார்



மனசுக்குள். அவன் பக்கம் பார்த்தபோது, அவனும் தம் பக்கம் பார்த்துவிட்டு முகத்தை நேராகத் திருப்பிக் கொள்வதைக் கண்டார்.

"கார் ரிப்பேர் ஆகியிருக்குமோ ?"

இருவரும் வந்த பக்கம் திரும்பிப் பார்த்தார்கள். சாலை, வளைசல் இல்லாமல், கயிறு பிடித்த மாதிரி கண்ணுக்கெட்டின வரை எதிரே ஓடிக் கொண்டிருந்தது.

தூரத்தில் கார் தெரிந்தது. பானெட் இன்னும் திறந்தபடிதான் இருந்தது. டிரைவரும் தேசிகனும் ரிப்பேர் பண்ணிக் கொண்டிருந்தார்கள்.

* * *

முதல் நாளன்று, இன்னொரு புரொபசர் பிள்ளைக்குக் கும்பகோணத்தில் கல்யாணம். அதற்குத்தான் இவர்கள் காரில் வந்தார்கள். திரும்பிப் போகிற போதுதான் கார் மக்கர் பண்ணுகிறது.

டிரைவர் என்ன முயன்றும் கார் ஸ்டார்ட் ஆகாமல் சத்தம் போடுவதோடு நின்றது.

கிரு கிரு கிரு கிரு.... கிரு கிரு கிரு கிரு.....

எங்கிருந்தோ ஓர் ஆள் வந்தான். கூடை நிறைய இளநீர்க் காய்களைக் கொண்டு வந்தான். சதக் சதக் என்று சீவிக் கொடுத்தான். ரூபாய் நோட்டைக் கொடுத்து, சில்லறையை வாங்கிப் பர்சுக்குள் திணித்தார் ராமநாதன்.

"தேவலியே. இந்த கிராமாந்தரத்துலேயும் இளநீர் சாப்பிட ஸ்ட்ரா வாங்கி வச்சிருக்கானே !" என்றாள் புரொபசரின் மனைவி.

"கிராமாந்தரமாவது அம்மா ? கும்பகோணத்துக்குப் பக்கத்துலே இருக்கு" என்றான் தேசிகன்.

சாலையின் இரண்டு பக்கமும் இருந்த தென்னந்தோப்புகளின் மேல் பார்வையை ஓட்டினார் ராமநாதன். அங்கங்கே குளம் குட்டை; தண்ணீர்த் தேக்கம்; குளுகுளு என்று காற்று. என்ன செழிப்பு, என்ன செழிப்பு என்று நினைத்துக் கொண்டார். இங்கேயே உட்கார்ந்து காற்று வாங்கிக் கொண்டு, தாகம் என்கிற போதெல்லாம் இளநீர் சாப்பிட்டுக் கொண்டு இருந்துவிடலாம் போல் மனசுக்கு ஆசை காட்டுகிறதே...

ராமநாதன் புரொபசர் மனைவி பக்கம் பார்த்தார். உமர்கயாமையும் பாரதி பாடலையும் நினைத்துக் கொண்டார்.

டிரைவர் காரின் பானெட்டைத் தூக்கி அதனுள் தலையை நட்டுக் கொண்டான்.

"என்ன வந்துடுத்து இதுக்கு?"

ராமநாதன் கேட்டார். பொதுவாகக் கேட்ட மாதிரி தோன்றினாலும், அவர் பார்வை புரொபசர் மனைவி பக்கம் இருந்தது.

'என்னடா பார்வை சற்றைக் கொருதரம் அந்தப் பக்கம்?' என்றது மனசு.

'நான் என்ன பண்ணட்டும்? அவள் அப்படிப் பார்வையை இழுக்கிறாளே. கண்ணை மூடினாலும் எதிரே நிக்கறாளே' என்று எண்ணிக் கொண்டே கண்களை மூடிப் பார்த்தார். புரொபசர் மனைவி ஆனதால், வாரி வளைத்து நகைகளை அணியாத நாசூக்கான ஆடை தரித்த உருவம், மறையாமல் அப்போதும் எதிரே நின்றது. நல்ல உயரமாய், அதற்கேற்ற பருமனுமிருந்தாள். வெளுப்பு நிறம் நெற்றிக் குங்குமத்தை ரத்தச் சிவப்பாக எடுத்துக் காட்டுகிறது. தலையில் சுருள் சுருளாக வழியும் பாலக்காட்டுக் கருங்கூந்தல். ஏன் இந்த உருவம், கண்ணை இறுக மூடிக் கொண்டாலும் எதிரே நின்று மனசை அலைக் கழிக்கிறது?

" அடிக்கடி இப்படித்தான் மக்கர் பண்றது. சர்விசிங்க்கு அனுப்பணும் !" என்றார் புரொபசர்.

ராமநாதன் கண்ணைத் திறந்தார். காரின் பின் சீட்டில் துவண்டு சாய்ந்தபடி, சிகரெட் புகையை இழுத்து விட்டுக் கொண்டிருந்த புரொபசரைப் பார்த்தார்.

தங்கம் கலந்த வெள்ளியாக மினுமினுக்கும் அமெரிக்கன் கிராப்புத் தலையைப் புரொபசர் தடவிக் கொண்டிருந்தார். ரிம்லெஸ் மூக்குக் கண்ணாடியும் இரட்டை நாடி சரீரமும் அவருக்கு ஒரு பெரிய மனுஷத் தோற்றத்தைக் கொடுப்பது போல் தோன்றின ராமநாதனுக்கு. ஓயாத சிகரெட் புகையால் கறுத்துப் போய் மரவட்டை மாதிரி இருந்த தடித்த உதடுகளும், வாயைத் திறந்தால் தெரியும் பழுப்புக் காவி ஏறிய பற்களும்தாம் கண்ணை உறுத்தின.

புரொபசர் நாலைந்து வருஷங்கள் ஸ்டேட்ஸில் இருந்துவிட்டு வந்தவர். போகும்போது, தம் டெக்னாலஜி உண்டு தாமுண்டு என்று தான் போனார். அரவிந்தரைப் பற்றியும், ஆனந்த குமாரஸ்வாமியைப் பற்றியும், ஜே. கிருஷ்ணமூர்த்தியைப் பற்றியும் அங்கே யார் கேட்டார்களோ, தெரியவில்லை. திரும்பி வரும்போது அவர்கள் எழுத்துக்களில் ஒரு மோகம். விழுந்து விழுந்து படிக்கிறார்.

வேஷ்டியை மடித்துக் கட்டிக் கொண்டு, டிரைவர் பக்கத்தில் நின்றிருந்த லாபரட்டரி அட்டெண்டர் தேசிகனுக்கும் கார் விஷயங்களுக்கும் ஸ்நானப்ராப்தி இல்லை. இருந்தாலும், டிரைவருக்கு ஒத்தாசை செய்வது போல் காட்டிக் கொண்டான். கெட்டிக்காரன். பெரிய மனுஷர்களோடு பழகுவதில் ரொம்பப் பிரியம். குறைந்த சம்பளம்தான். ஆனால், எப்போதும் முகத்தில் சிரிப்பு, வாயில் வெற்றிலை, வயசுக்கு மீறிய துடிப்பு, உற்சாகம். எப்படித்தான் முடிகிறதோ ?

பின் சீட் பக்கமாக வந்து அவன், "ஸார்! இந்த ஊர்க் கோயில் ரொம்பப் பெரிசு. நன்னாயிருக்கும். நீங்க பார்த்திருக்கேளா ?" என்று புரொபசரைக் கேட்டான்.

"உம்.... நான் வட ஆர்க்காட்டுக்காரன். கும்பகோணம் பக்கம் எதுக்காக வரப் போறேன் ? சந்தர்ப்பம் இதுவரைக்கும் நேரல்லே. இங்கே என்ன கோயில் ?" என்று அவர் கேட்டார்.

"மகாலிங்கஸ்வாமி. மத்யார்ஜுனம்னு ரொம்ப விசேஷமாச் சொல்லுவா."

"ஒனக்கு எந்த ஊர்டா ?"

"நாங்குநேரி. திருநெல்வேலி ஜில்லா."

"ஒனக்கு என்னமா இந்தக் கோயிலைப் பத்தித் தெரியும்? அதுவும் நீ வைஷ்ணவன். சிவன் கோயில் ஸ்வாமி வெளிலே வந்தாலே வாசக் கதவைப் படீரென்று சாத்திண்டு உள்ளே போயிடுவேளே !"

தேசிகன் சிரித்தான். வாய் வெற்றிலையைச் சற்று எட்டப் போய்த் துப்பிவிட்டு வந்தான்.

# வயிற்றுக் கோளாறா?

வாயுவா?
அமில உபாதையா?
நெஞ்செரிச்சலா?
அஜீரணமா?





## 2 ரென்னி மாத்திரைகளை மெல்லுங்கள்... விரைவிலேயே நிவாரணம் பெற




நிக்கோலஸ் ⓝ தயாரிப்பு

mcm/ni/4 tam

# பெண்மையின் மென்மையை உணர
# ஆண்களைப் போல் 'ஷேவ்' செய்யாதீர் !

ஆன் பிரெஞ்சு ஹேர் ரிமூவர் தடவி
பெண்மை வழியிலே உரோமத்தை
வழித்தெறியுங்கள். அது மென்மை
யானது, இன்மணம் கொண்டது.
உரோமங்களின் வேர்கள் வரை
ஊடுருவிச் செயல் புரிகிறது.
வெட்டுக்கள் இல்லை, உரோமத்
துகள்கள் இல்லை. வாரக்
கணக்கில் வழவழப்பான சருமம்






## பட்டுப்போன்ற கரங்களுக்கும் கால்களுக்கும்.
## ஆன் பிரெஞ்சு ஹேர் ரிமூவர்

ட்ரேட்மார்க்கின் ரெஜிஸ்டர்ட் யூஸர்: ஜெப்ரி மேனர்ஸ் & கம்பெனி லிட்.        95-AF-172-Tam.

# கிளி அருமையைப் பூனை அறியுமா?



முதல் பரிசு

ரூ. 50. பெறுபவர்

திரு ஜி. பிரபாகர்

''பக்கத்துலெ உப்பிலியப்பன் கோயில் இருக்கு. அதுக்கு வந்திருக்கேன். அப்படியே இதுவும் பார்த்ததுதான். எனக்கு அப்படி எல்லாம் வித்தியாசம் இடையாது சார். திருப்பதிக்குப் போவேன், திருத்தணிக்கும் போவேன்.''

''பலே, எம்மதமும் சம்மதம்!''

புரொபசர், சின்னதாகிவிட்ட சிகரெட்டில் இன்னொன்றைப் பற்ற வைத்துக் கொண்டு, பழசை வெளியே எறிந்தார். மனைவி பக்கம் பார்த்தார்.

''இந்த ஊர்க் கோயில் நன்னாயிருக்காம். போயிட்டு வரயா?''

''உம்.....''

ராமநாதன் பக்கம் திரும்பி, ''நீ இந்தப் பக்கமெல்லாம் வந்திருக்கியோ?'' என்று கேட்டார் புரொபசர்.

''இல்லெ சார். செங்கல்பட்டைத் தாண்டி வந்ததே இல்லெ.''

''வட ஆர்க்காட்டைச் சேர்ந்தவர் வேறே யாரோடேயும் சம்பந்தம்கூடப் பண்ண மாட்டா. தட் ஈஸ் தி ட்ரபிள். என்னையும் ஒன்னையும் பத்தி வட ஆர்க்காடு அன்யோன்யம்னு பேசிக்கறாளாமே?''

''ஆமாம், ஸார். இதோ தேசிகனே....''

''சும்மா தமாஷுக்கு ஸார்!'' என்றான் தேசிகன்.

''நான்தான் மைதிலியைப் போய்ப் பாலக்காட்டிலேயிருந்து பிடிச்சுண்டு வந்தேன்.''

தேசிகன் ''அம்மா'' பக்கம் பார்த்து, பவ்யமாகச் சிரித்தான். ராமநாதன், குழந்தை மூஞ்சியில் புன்சிரிப்பை வரவழைத்து உப்பல் கன்னங்களை இன்னும் உப்பச் செய்து, காற்றை வாய்க்குள் உஸ்ஸ்.... என்று இலேசாக இழுத்து, உதட்டை நக்கிக் கொண்டார்.

''அப்பொ, இவாளெ அழைச்சிண்டு போயிட்டு வாயேன், கார் ரிப்பேர் ஆறதுக்குள்ளே'' என்றார் புரொபசர் தேசிகனிடம்.

''வாண்டாம் ஸார். அம்மாவும் ராமநாதன் ஸாரும் போயிட்டு வரட்டும். காரை ஒரு வேளை தள்ளணும்னு என்ன பண்றது? நான் இருக்கேன். அதோ, கோபுரம் தெரியறதே. அதுதான் கோயில். ரொம்ப தூரம் இல்லே'' என்றான் தேசிகன்.

''பாத்தியா! உப்பிலியப்பன் கோயில்னு ஒடுவே!''

''அட, ராமா! அதெல்லாம் இல்லே ஸார். இதோ போயி, நெத்திலே பட்டையா விபூதியோட வர்றேனு இல்லியா பாருங்க.''

''வாண்டாம் இரு. அவா போயிட்டு வரட்டும்.''

ராமநாதனும் மைதிலியும் நடந்தார்கள்.

* * *

ராமநாதனுக்குப் பூமியில் கால் பாவுகிற மாதிரியே இல்லே; மிதப்பதுபோல் இருந்தது. அவளோடு தனியாக நடக்கிறோம் என்கிற ஒரே சிந்தனே. அதிலே என்ன குஷியோ என்று மனசு கேட்டது. குஷியோ இல்லியோ, தென்னந் தோப்பு, பசுமையான வயல்வெளி, குளுமையான காற்று எல்லாம் எங்கியோ போயிட்டாப்பலெ இருக்கே! இவ ஒருத்தி பக்கத்துலே இருக்கறதுதானே தெரியறது!

கோயிலுக்குள் நுழைந்ததும், ''எவ்வளவு பெரிய கோயில்! கூட்டமே இல்லியே?'' என்றாள் புரொபசரின் மனைவி.

''ஊர் சின்னது. கோயில்தான் பெரிசு.''

சுவாமி சந்நிதி பூட்டி இருந்தது. இரண்டு அணில்கள் குறுக்கும் நெடுக்கும் ஓடின. ஓடிப் பிடிக்கிற ஆட்டம் ஆடுகிற மாதிரி. மேலே, கோபுர வாசல் பக்கத்திலேயிருந்து ங்ஙொய் என்று வௌவால் முனகுவது, எதற்காக எங்கள் நிம்மதியைக் குலேக்கிறீர்கள் என்று கேட்பதுபோல் இருந்தது.

குருக்கள் எங்கிருந்தோ ஓடி வந்து கதவைத் திறந்தார். டர்ர்ர்ர்... என்ற சத்தத்துடன் அலிபாபா குகை மாதிரி திறந்து கொண்டது.

''அர்ச்சனை பண்ணட்டுமா?''

''நாங்க ஒண்ணும் வாங்கிண்டு வல்லே.''

''வில்வம் இருக்கு, போறும்'' என்று தட்டையும் தண்ணீர்ப் பாத்திரத்தையும் கொண்டு வந்தார். ராமநாதனிடம் தட்டைக் காட்டித் தொடச் சொல்லி, நட்சத்திரமும் பெயரும் கேட்டார். எதிரே நின்றவளிடமும் நீட்டினர்.

சந்நிதியைச் சுற்றிப் பல பிராகாரங்கள் சுற்றிச் சுற்றி வந்ததில் காலேக் கடுத்தது; வேர்த்துவிட்டது. மேல் உதட்டில் அரும்பிய வேர்வையைப் புரொபசர் மனைவி நாசூக்காகக் கைக் குட்டையால் ஒத்தினள். விலாவுக்கு மேலே ரவிக்கை நனைந்து வருவதைக் கவனித்தார் பக்கத்திலிருந்தவர். நிழலாக இருந்த ஓரிடத்தில் இருவரும் உட்கார்ந்தார்கள்.

''குருக்கள் நம்மை ஹஸ்பெண்ட் அண்ட் ஒய்ஃப்புன்னு நெனச்சுட்டார்.''

''ஆமாம். நம்மோட 'அவ'ரையும் சேர்த்துப் பார்க்கறவாகூட என் அப்பான்னு தான் நெனச்சுப்பா.''

ராமநாதன் அவளேயே பார்த்தார்: அவளோ வேறு பக்கம் பார்த்தாள். ஒவ்வொரு சமயம் இருவர் பார்வைகளும் மோதிப் பிரிந்தன.

இப்படிச் சில நிமிஷங்கள். தென்னந் தோப்பும், வயல்வெளியும், குளுமைக் காற்றும் முன்பு எங்கேயோ போன மனுஷனுக்கு இப்போது கோயிலும், ஸ்வாமியும், அம்பாளும்கூட எங்கேயோ போய்விட்டார்கள்.

'ஒன்னைத் தனியாப் பார்க்கணும்னு ரொம்ப நாளாவே எனக்கு ஆசை.'

'இதோ பார்க்கறமே.'

'இந்த மாதிரி எடத்துலெ இல்லே.'

பட்டாம் பூச்சியின் சிறகு மாதிரி இரண்டு நெஞ்சுகள் அடித்துக் கொண்டன.

காரில் இருந்த புரொபசர் கொட்டாவி விட்டார். சோம்பலே விரட்ட, பக்கத்தில் கிடந்த புஸ்தகத்தை எடுத்து, ஓரம் மடித்திருந்த பக்கத்தைப் புரட்டிப் பார்த்தார். தூக்கம் கண்ணே அசத்தியது.

''ஸார்! கார் ரெடி!'' என்றான் தேசிகன்.

ஹாரன் சத்தம் கேட்டதும், ''கார் ரிப்பேர் ஆயிட்டாப்பலெ இருக்கு'' என்று ராமநாதன் சொல்ல, இருவரும் எழுந்தனர்.

தொப்புளுக்குக் கீழே கட்டின பஞ்சகச்ச வேஷ்டியும், அதன் மேல் இறுக்கி முடிந்த காசித் துண்டுமாய் ஒருவர் எதிரே வந்தார். நடுத்தர வயதுக்காரர்.

''இந்த வழியாகவா வெளியே வந்தேள்?''

ராமநாதன் தலையசைத்தார்.

''இப்படி வெளிலே வர வழக்கமில்லே. உள்ளே போறச்சேதான் இந்த வழியாப் போவா. வெளிலே போறச்சே வேறே வழியாப் போயிடணும். ஏன்னு கேட்டா, சோழனைப் பிரம்மஹத்தி புடிச்சுண்டுதாம். எங்கே போனாலும் தீரலே. கடசிலே இங்கே வந்தான். இந்த வழியா ஸ்வாமி சன்னதிக்குப் போனான். பிரம்மஹத்திக்கு உள்ளே போகத் தைரியம் இல்லே. இங்கியே, கோபுர வாசல்லே உக்காந்துடுத்து. சோழன் மறுபடியும் வெளிலே வரச்சே புடிச்சுக்கலாம்னு. சோழனுக்கு இது தெரிஞ்சு போயி, அவன் வேறே வழியா வெளிலே போயிட்டான். பிரம்மஹத்தி இன்னும் இங்கியே உக்காந்துண்டு இருக்கிறதாக ஐதிகம்; பாவிகள் யார் வந்தாலும் புடிச்சுக்கலாம்னு. பாவம் பண்ணுதவா யார் இந்த லோகத்துலே?''

பஞ்சகச்சம் சிரித்தார்.

''அதோ பாருங்கோ! சின்னப் படிக்கட்டு இருக்கே, அதுலே ஏறிப் பார்க்கலாம்'' என்று சொல்லிவிட்டு, உள்ளே போனார்.

இரண்டு பேரும் படி ஏறிப் பார்த்தார்கள். அதிக வெளிச்சம் இல்லாத சின்ன இடத்தில், குரங்கைப் போல் ஓர் உருவம் தலே குனிந்து, தொடையில் முழங்கையை ஊன்றி, கன்னத்தில் கைவைத்து உட்கார்ந்திருந்தது.

ராமநாதன் வெறிக்க வெறிக்கப் பார்த்தார். பக்கத்தில் நின்றவள் சிரித்தாள்.

''இதுலே என்ன இருக்கு இப்படிப் பார்க்க?''

''ஒண்ணுமில்லே.''

''பின்னே, சோழ பிரம்மஹத்தியையே நேர்லே பார்க்கறாப்பலெ பார்த்துண்டு நிக்கறேளே? அது இன்னுமா இங்கே இருக்கப் போறது?'' என்றாள்.

எவ்வளவு உண்மையான வார்த்தை என்பதை உணர்ந்தபோது ராமநாதனுக்குக் குப்பென்று வியர்த்து விட்டது.

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam




ஆண்மை —
அடக்கியாளும்,
ஆர்வமூட்டும்,
அலைபாயும்,
அதிரடிக்கும்.
ஆண்மையின்
பன்முகப்
பண்புகளைப்
படித்தறிந்த படைப்பு
'டெரோஸெல்'
ஷர்ட்டிங்!

டெரோஸெல்®

'டெரோஸெல்' என்றொரு திருச்சொல்—தரிப்பவனை
மன்னனுக்கும் தாரக மந்திரம்! மபத்லால் 'டெரோஸெல்'
ஷர்ட்டிங்—எழிலாடும் வண்ணங்களில், இளஞ் சாயல்களில்,
திசையெட்டும் வென்றிட்ட டிசைன்களில் வருகுது.
ஒப்பிலா ஆடவ-மாமணிகளுக்கு உறவுசொல்லும் ஷர்ட்டிங்!
உயர்தரக் காட்டன் மற்றும் போலியெஸ்டர் இழைகலந்த
பழுதில்லா நெசவு!

**மபத்லால் க்ரூப்**

AIYARS-M.245 TM

Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon இலங்கையில் 45 சதம் (தபால் செலவு தனி)